ஆகஸ்ட் 2005



Rs. 12 /-

# அம்புலிமாமா

ஜீ-மேன்
சாகஸங்களை இந்த இதழில்
படித்து மகிழுங்கள்

G-man

**கோ-ஆப்டெக்ஸ் காலத்திற்கேற்ற புதுமையுடனும்**
**பாரம்பரியப் பெருமையுடனும்...**
**1935 முதல் மிகச் சிறந்த இரகங்களை**
**உங்களுக்காகவே வழங்குகிறது.**

- ★ காஞ்சிபுரம் அசல் பட்டு சேலைகள்
- ★ சேலம் தரமிக்க பட்டு சேலைகள்
- ★ ஆரணி தரமிக்க பட்டு சேலைகள்
- ★ கோயமுத்தூர் உயர்ரக பருத்தி சேலைகள்
- ★ உறையூர் பருத்தி சேலைகள்
- ★ சேலம் உயர்ரக பருத்தி சேலைகள்
- ★ மதுரை சுங்கடி புடவைகள்
- ★ சென்னிமலை ஏற்றுமதி தரம் வாய்ந்த படுக்கை விரிப்புகள்
- ★ கோவை ஏற்றுமதி தரம் வாய்ந்த எரலை துண்டுகள் (டவல்கள்)
- ★ குறிஞ்சிப்பாடி ஏற்றுமதி தரம் வாய்ந்த லுங்கிகள்
- ★ தாத்தையங்கார்பேட்டை வேட்டிகள்







**இவை அனைத்தும் உங்களுக்காக வழங்குகிறது கோ-ஆப்டெக்ஸ்.**
**வாருங்கள். பாருங்கள். வாங்குங்கள் - முழு திருப்தியைக் கண்டு மகிழுங்கள்.**

ஆண்டுதோறும் 1.00.000 பட்டு புடவைகள். 3.00.000 பருத்தி புடவைகள் 10.00.000 பருத்தி விரிப்புகள் மற்றும் 10.00.000 டவல்கள் விற்பனை செய்யப் படுகின்றன. டெல்லி. மும்பாய். கொல்கத்தா. பெங்களூர். அகமதாபாத். கோவை. திருச்சி மற்றும் இந்தியாவின் பிற முக்கிய நகரங்களில் எங்கள் சேவை உங்களுக்காக.

தலைமுறைகளாய் தொடரும் பந்தம் - கோ-ஆப்டெக்ஸ்



அம்புலிமாமா மதிமுகம் : 58 ஆகஸ்ட் : 2005 புன்னகை : 08



## பொருளடக்கம்



## சிறப்புப் படைப்பாக


















SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**

*Remittances in favour of Chandmama India Ltd.*
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
**No. 82, Defence Officers Colony Ekkatuthangal, Chennai - 600 097**
**E-mail :**
subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900 /- இந்தியாவிற்குள் ரூ.144 /- **புக்போஸ்டில் உங்கள்** சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியாடரிலோ **சந்தமாமா இந்தியா லிமிடெட்** என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# வெற்றிக்குத் தேவை சுயகட்டுப்பாடு

சமீபகாலமாக எவரெஸ்ட் சிகரத்தைப் பற்றிய செய்திகள் பல வந்து கொண்டே இருக்கின்றன. ஷெர்பா ஒருவர் 15-வது முறையாக எவரெஸ்ட் சிகரத்தை ஏறி அழைத்து ஒரு புதிய உலக சாதனை படைத்துள்ளார். இந்திய ராணுவத்தைச் சேர்ந்த ஒரு மகளிர் அணி முதன் முறையாக எவரெஸ்ட் சிகரத்தை வெற்றிகரமாக அடைந்தனர். நேபாளத்தைச் சேர்ந்த ஒரு மண மகனும் மணமகளும் எவரெஸ்ட் சிகரத்தில் தமது திருமண நிகழ்ச்சியை நடத்தினர். 24 நபர்களைக் கொண்ட சீனர்களின் அணி ஒன்று எவரெஸ்ட் சிகரத்தின் உயரத்தை சரியாக அளக்க முயற்சி செய்துள்ளனர். இந்த நிகழ்ச்சிகள் நமக்குக் காட்டுவதென்ன? இத்தனை பேர் சாதனை புரியும் அளவிற்கு எவரெஸ்ட் சிகரத்தின் உயரம் திடீரென குறைந்து விடவில்லை.

52 ஆண்டுகளுக்கு முன், டென்சிங்கும் ஹிலாரியும் முதன் முதலாக எவரெஸ்ட் சிகரத்தில் காலடி எடுத்து வைத்தபோது, அது மிகப் பெரிய சாதனையாகக் கருதப்பட்டது. இப்போது அதைப் பலரும் செய்வது ஒன்றை மட்டும் தெளிவாகக் காட்டுகிறது. மனிதனுக்கு மன உறுதியும், சுயகட்டுப்பாடும் இருந்தால் அவனால் சாதிக்க முடியாதது எதுவுமில்லை. சிறு வயது முதல் யோகா, தியானம் போன்ற பயிற்சிகளினால் மனத்தைக் கட்டுப்படுத்தி உறுதியாக்க முயன்றால் அவர்கள் பெரியவர்களாகி சாதனைகளைச் செய்வர் என்பதில் ஐயமில்லை.

அத்தகைய முயற்சிகளை சிறுவர்கள் இப்போது முதலே கையாள வேண்டும். அவ்வாறு செய்தால் எதிர்கால பிரஜைகளான சிறுவர்கள் தனது 58 ஆம் ஆண்டு சுதந்திர தினத்தை நோக்கிப் பீடு நடை போடும் நம் நாட்டின் சாதனையாளர்களாகத் திகழ்வார்கள்.

ஆசிரியர் : **விஸ்வம்**







## வாசகர்களுக்கானக் கதைப் போட்டி (ஜனவரி)

### தேர்ந்தெடுக்கப் பட்ட சிறந்த கதை



அந்த பண்டிதர் மிகவும் யோசித்தார். பலமுறை யோசித்துப் பார்த்தும் அவருக்கு விடை எதுவும் தோன்றாததால் வேறு வழியின்றி படகோட்டியிடம் ''எனக்கு இந்தக் கேள்விக்கான விடை தெரியவில்லை. ஆகையால் என் தோல்வியை நான் ஒப்புக் கொள்கிறேன். இந்தா பணம்'' என்று பந்தயத்தின் பணமான இரண்டு ரூபாயை பட கோட்டியின் கையில் பண்டிதர் கொடுத்தார். அதன்பிறகு, ''இதற்கான சரியான விடையை நீயே சொல்'' என்றார் பண்டிதர்.

ஒரு பண்டிதரையே தோற்கடித்து விட்டோமே என்ற கர்வத்தில் படகோட்டி பெருமிதம் கொண்டான். அவன் பண்டிதரிடம் பணத்தைப் பெற்றுக் கொண்டு, ''இவ்வளவு பெயரும், புகழும் உடைய பண்டிதரான உங்களுக்கே இந்தக் கேள்விக்கான சரியான விடை தெரியவில்லையென்றால் சாதாரண படகோட்டியான எனக்கு எப்படித் தெரியும். எனக்கும் அதற்கான விடை தெரியாது. நானும் இப்போட்டியில் தோற்றுவிட்டேன் என்பதை ஒப்புக் கொள்கிறேன். இந்தாருங்கள். நம் ஒப்பந்தப்படி நான் தோற்றதற்கான பணம்'' என்று பண்டிதரிடம் ஒரு ரூபாய் நாணயத்தைக் கொடுத்தான்.

முதலில் பண்டிதர் படகோட்டியின் இச்செயலைக் கண்டு மிகவும் கோபம் கொண்டார். ஆனால் அவனது புத்திசாலித்தனத்தை எண்ணி வியந்து அவனைப் பாராட்டினார். அதன் பிறகு அவர் இறங்க வேண்டிய இடம் வந்ததும் தன் வழியே செல்லலானார்.

**எழிலரசன்,** (8ஆம் வகுப்பு) த/பெ. அண்ணாதுரை,
3/173 அஞ்சல் நிலையத் தெரு, கீழ்ப் பெரம்பலூர் (அஞ்சல்),
பெரம்பலூர் மாவட்டம், குன்னம் வட்டம்,
துங்கபுரம் (வழி) - 621 716.



# சிறந்த வைத்தியர்

வல்லபுரியில் இராமன் என்ற மிகப் புகழ் பெற்ற மருத்துவர் இருந்தார். அவரைக் காட்டிலும் சிறந்த வைத்தியர் யாரும் இல்லை என்று மக்கள் புகழும் அளவிற்கு அவர் மருத்துவத்துறையில் நிபுணராக இருந்தார். ஆனால் அவருக்குப் குழந்தைகள் யாருமில்லாத காரணத்தால், தன்னுடைய மருத்தவத் தொழிலை தகுந்த ஒரு நபருக்குப் பயிற்றுவிக்க அவற்றுக்குரிய நபரைத் தேடிக் கொண்டிருந்தார்.

ஒருநாள், அவருடைய தூரத்து உறவினரான கனகசபேசன் நகரத்தில் இருந்து தன்னுடைய சிகிச்சைக்காக இராமனைத் தேடி வந்தார். தன்னுடன் தனது இரு மகன்களையும் அழைத்து வந்திருந்தார். நகரத்தில் பல வைத்தியர்கள் முயன்றும் குணப்படுத்த முடியாத தனது வாயுக்கோளாறுக்காக, இராமனிடம் சிகிச்சை பெற வந்தார். இராமன் அவருக்கு அளித்த சிகிச்சையை கவனித்த அவருடைய இரு மகன்களுக்கும், வைத்தியரான இராமன் மீது மரியாதையும் மருத்துவத் தொழில் மீது ஆர்வமும் உண்டாயின.

இரண்டே வாரத்தில் பூரண குணமடைந்த கனகசபேசன் நகரத்திற்குத் திரும்பிப் போகுமுன் இராமனிடம், ''இராமா! நீ சாதாரண வைத்தியனல்ல! ஆனால் உன்னுடைய இந்த நிகரற்ற திறமை உன்னுடனே ஒடுங்கி மறைந்து விடாமல் இருப்பதற்கு நீ ஏன் உன் வைத்தியத் தொழிலுக்கு ஒரு வாரிசு ஏற்படுத்திக் கொள்ளாமல் இருக்கிறாய்? '' என்று கேட்டார். ''அதற்குத் தகுதியான நபரை தேடிக் கொண்டேயிருக்கிறேன்'' என்றார் இராமன். ''அப்படியானால் ஒன்று செய்! என்னுடைய இரு பிள்ளைகளுக்கும் வைத்தியத் தொழிலில் மிகுந்த ஆர்வம் ஏற்பட்டுள்ளது. அவர்களை உன் மாணவர்களாக விட்டுச் செல்கிறேன்'' என்றார் கனகசபேசன்.

''அப்படியே ஆகட்டும்! ஆனால் இருவரையும் நன்கு சோதனை செய்த பின்தான், என் மாணவர்களாக ஆக்கிக்

-பத்மா-



கொள்வேன்!'' என்று இராமன் கூற , தனது பிள்ளைகளை அவரிடமே விட்டு விட்டு, கனகசபேசன் நகரத்திற்குத் திரும்பினார். கனகசபேசனின் புதல்வர் களான ராகவனும், கேசவனும் வைத்தி யரிடம் முறையே பயிற்சி எடுத்துக் கொள்ளத் தொடங்கினர்.

ஒருநாள் பக்கத்து கிராமத்து ஜமீன்தாருக்கு சில மாதங்களாகவே உடல் நலம் சரியில்லை என்றும், பக்கத்தில் இருந்து வைத்தியம் செய்ய வேண்டும் என்று ஜமீன்தாரின் ஆள் ஒருவன் வந்தான். ஜமீன்தாருக்கு வயிற்றுக் கோளாறு என்று கேட்ட வுடன், அவருடைய பிரச்சினைக்கு மூலகாரணம் சீரணக் கோளாறு என்று தெரிந்து கொண்ட ராமன், தனக்குப் பதிலாக கேசவனைச் செல்லுமாறு பணித்தார். சீரணக் கோளாறுக்குரிய மருந்துகளையும் அவர் குறிப்பிட்டார்.

ஜமீன்தாருடைய கிராமத்தை அடைந்த கேசவன், தனது குரு சொல்லியது போல் மூலிகை மருந்துகள் தயாரித்து ஜமீன்தாருக்கு அளித்தான். இரண்டு நாள்களிலேயே குணமான ஜமீன்தாருக்கு, மீண்டும் ஓரிரு நாள்களி லேயே வயிற்று நோய் திரும்பியது. குழப்பமடைந்த கேசவன் தன் குரு விடம் திரும்பி வந்து, அவர் சொன்ன மருந்துகளைக் கொடுத்தும், ஜமீன்தார் குணமடையவில்லை என்றான்.

பிறகு ராமன் அடுத்ததாக ராகவனை ஜமீன்தாரிடம் அனுப்பினார். ஜமீன் தாருடைய வயிற்று நோயைப்பற்றி தீர விசாரித்த ராகவன், அவர் சாப்பிடும் உணவு வ கைகளை க வனித்தான். தினமும் அவர் ஏராளமான கொழுப்புப் பண்டங்களை சாப்பிடுவதால்தான் மருந்துகள் உண்டும் அவர் நோய் குணமாகவில்லை என்பதை அறிந்ததும் அவன் ஜமீன்தாரிடம் ''ஐயா, இன்று முதல் கொழுப்புப் ப ண்டங்களை அறவே தவிருங்கள். வெறும் மிளகு ரசம் சாதமும், கீரையும் மட்டும் ஒரு வாரம் உண்ணுங்கள். பிறகு நான் மருந்து தருகிறேன்'' என்றான்.

ஒருவாரம் ஜமீன்தார் பத்திய சாப்பாடு சாப்பிட்ட பிறகு, ராகவன் சில மருந்துகளை அவருக்கு அளிக்க, அவர் பூரண குணமானார். அதன் பிறகு ராகவன் தன் இருப்பிடம் திரும்பினான். ராகவனிடம் விவரங்களைத் தெரிந்து கொண்ட கேசவன் தன் குருவிடம், ''ஐயா! ராகவன் ஜமீன்தாருக்குத் தந்தது மிளகு, சீரகம் ஆகியவற்றால் தயாரித்த ஒரு கசாயம்! அவ்வளவுதான்! அதிலேயே அவர் குணமாகி விட்டார்.

ஆனால் நீங்கள் சொன்ன மருந்துகளைத் தான் நான் அவருக்குக் கொடுத்தேன். அப்போது அவர் குணம் அடையாதது ஏன்?'' என்று கேட்டான்.

இராமன் புன்னகைத்துக் கொண்டே, ''கேசவா! நோயாளியினுடைய நோய் என்ன என்று மட்டும் தெரிந்தால் போதாது. அதற்கான காரணத்தையும் வைத்தியர் அறிய வேண்டும். வெறும் மருந்து மட்டும் அளித்தால் பயன் இல்லை. ராகவன் நோய்க்குக் காரணமான அவர் உணவுப் பழக்கத் தையே மாற்றி அமைத்தான். அதனால் தான் அவனுடைய சிகிச்சையால் ஜமீன்தார் குணமானார்,'' என்றார்.

மற்றொரு நாள் ராகவன், கேசவன் இருவரும் காட்டில் மூலிகைகள் சேகரிக்கையில், ஒரு மரத்தடியில் ஒரு மனிதன் மயக்கமாக விழுந்திருந்தான். உடனே கேசவன், ''யாரோ பிச்சைக் காரன் பட்டினியால் மயக்கமாக கிடக்கிறான். போகட்டும் போ! நாம் நம்முடைய வேலையைச் செய்வோம்!'' என்றான். ஆனால் ராகவன் ஒத்துக் கொள்ளவில்லை. ''இவனுக்கு முதலுதவி அளித்து மயக்கத்தைத் தெளிவித்து வீட்டிற்கு அழைத்துச் செல்வோம். பசிமயக்கம் எனில் உணவளிப்போம். வேறு ஏதாவது காரணத்தால் மயக்கம் எனில் சிகிச்சை செய்வோம்'' என்றான். பிறகு இருவரும் அவனுக்கு மயக்கம் தெளிய வைத்து அவனை அழைத்துச் சென்றனர்.

இதையெல்லாம் கவனித்த வைத்தியர் ராமன், ''ஒரு நல்ல மருத்துவருக்கு இயல்பாகவே இரக்கம் தேவை. ஒரு மனிதன் நோயினாலோ அல்லது வேறு காரணத்தினாலோ துன்பப்படும்போது அவனுக்கு உடனே சிகிச்சை அளிப்பது மருத்துவரின் கடமை. இந்தத் தொழிலில் பணத்தைக் காட்டிலும் மனித நேயமே முக்கியம்'' என்றார். உடனே கேசவன் ''மன்னித்து விடுங்கள் குருவே! வைத்தியராக மாறி நிறையப் பணம் சம்பாதிக்கலாம் என்ற ஆசையினால் தான் நான் உங்களிடம் மருத்துவம் பயின்றேன். எனக்கு இந்தப் புனிதமான பணி ஒத்து வராது. நான் என் வீட்டுக்குச் செல்கிறேன்'' என்று சொல்லிவிட்டுச் சென்று விட்டான். பிறகு ராகவன் மட்டும் வைத்தியத் தொழிலில் தேர்ச்சி பெற்று ஒரு சிறந்த வைத்தியரானான்.





# பேராசை

குமுதபுரி ராஜ்ஜியத்தின் எல்லையில் அமைதியாகப் பாய்ந்து கொண்டிருந்த குமுதினி ஆற்றங்கரையில் சோம சேகர முனிவருடைய ஆசிரமம் அடைந்திருந்தது. முனிவர் சாஸ்திர, ஆகமங்கள் மட்டுமன்றி சித்திரக் கலையிலும் மகா நிபுணர். ஒருவரைப் பார்த்த மாத்திரத்தில் அவரைப்போல் தத்ரூபமாக சித்திரம் வரையக் கூடியவர். அவரின் திறமையை அறிந்த குமுதபுரி கனவான்கள் பலர் ஆசிரமத்திற்கு வந்து தங்கள் உருவத்தை அவர் மூலம் சித்திரம் வரையச் செய்து எடுத்துச் செல்வதுண்டு. ஆனால் அவ்வாறு ஒருவரைப்போல் சித்திரம் வரைய முனிவர் ஏராளமான பணத்தைக் கேட்டு வாங்கினார். முற்றும் துறந்த ஒரு முனிவர் இவ்வாறு பண விஷயத்தில் கறாராக இருப்பது, அனைவருக்கும் வியப்பை அளித்தது.

ஒருநாள், ராஜ நர்த்தகியான சுபாங்கி ஒரு முத்துப்பல்லக்கில் ஆசிரமத்திற்கு வந்து இறங்கினாள். முனிவரை வணங்கிய பிறகு அவள் தன்னைப்போல் ஒரு சித்திரம் வரைய முனிவரிடம் வேண்டினாள்.

''உன்னுடைய ஓவியத்தை உடனே வரைந்து தருகிறேன். ஆனால் அதற்கு நீ நிறையப் பணம் தர வேண்டியிருக்கும்'' என்றார் முனிவர். ''பணத்தைப் பற்றி கவலையில்லை. உங்களுக்கு எவ்வளவு வேண்டுமோ கேளுங்கள் தருகிறேன்!'' என்று குயில்போல் கூவினாள் சுபாங்கி. ''உன்னுடைய அந்தஸ்திற்குப் பொருத்தமாக உன்னால் எவ்வளவு தர முடியும்?'' என்று கேட்டார் முனிவர்.

''என்னால் நூறு பொற்காசுகள் தர முடியும்?'' என்று கர்வத்துடன் கூறிய சுபாங்கியிடம் ''இருநூறு பொற்காசுகள் தா!'' என்றார் முனிவர்.

அவ்வளவு தூரம் முனிவரைத் தேடி வந்த பிறகு, பணத்திற்காகப்

-சமணர்களுடைய புராணக்கதையை ஆதாரமாகக் கொண்டது-

பேரம்பேச சுபாங்கி விரும்பவில்லை. முனிவரை ம னதிற்குள் சபித்துக் கொண்டே, இருநூறு பொற்காசு களை அவர் முன் எடுத்து வைத்தாள்.

பிறகு அவள் நடனமாடும் விதத்தில் அபிநயம் பிடிக்க, அதை அப்படியே சி த்திரமாக மு னிவர் வரைந்தார். வரைந்ததும் அதை அவளிடம் கொடுத்து விட்டார். பூரண திருப்தியுடன் அந்த சித்திரத்தைப் பெற்றுக் கொண்ட பின்னரும், முனிவரின் பேராசையை எண்ணிப் புழுங்கின சுபாங்கி, ''முனிவரே! மிக அழகாக என்னை சித்திரம் தீட்டி இருக்கிறீர்கள். ஆனால் இதற்காக நீங்கள் என்னிடம் வாங்கிய தொகை மிகவும் அதிகம். முனிவரான நீங்கள் இப்படிப் பேராசை பிடித்து அலை வதைப் பார்த்தால் எனக்கே வெட்க மாக இருக்கிறது!'' என்று கூறி விட்டு, பல்லக்கில் ஏறிச் சென்று விட்டாள்.

அதற்குப் பிறகும் சில ஆண்டுகள் முனிவர் பழையபடியே தனது உருவத்தை சித்திரமாக வரைய விரும்புவர்களிடம் ஏராளமாகப் பணம் வாங்கி சித்திரம் தீட்டிக் கொடுத்தார். திடீரென ஒருநாள் முனிவர் சித்திரம் வரைவதை நிறுத்தி விட்டார் என்ற செய்தி பரவியது. அதைக் கேட்ட நாட்டு மக்கள் மீண்டும் வியப்பில் ஆழ்ந்தனர். அதைக் கேட்ட சுபாங்கியும் முனிவருடைய இந்த மன மாற்றத் திற்குக் காரணம் என்ன என்று அறிய முனிவரது ஆசிரமத்தை அடைந்தாள்.

முன்பு அவள் ஆசிரமம் வந்த



போது, குண்டும் குழியுமாய் கரடு முரடாக இருந்த ஆசிரமத்திற்குச் செல்லும் பாதை, இப்போது செப்பனிடப்பட்டு சீராக இருந்தது.

ஆசிரமம் முன்பிருந்த இடத்தை அணுகியதும் சுபாங்கியின் விழிகள் வியப்பால் விரிந்தன. ஒரு அழகான பெரிய மண்டபம் அந்த இடத்தில் கம்பீரமாகத் தோன்றியது. முனிவருடைய சி ஷ்யர்களும் இ ன்னும் பலரும் அங்கே கூடியிருந்தனர். முனிவருடைய பி ரதான சிஷ்யன் பிரசங்கம் செய்து கொண்டிருந்தான்.

''பானு பிரகாஷ்நந்த சுவாமியின் நெடுநாள் க னவு ஒ ரு தி யான மண்டபம் நிர்மாணிப்பது! ஆனால் அவர் கனவு நனவாகும் முன் அவர் மண்ணுலக வாழ்வை நீத்தார். அவருடைய பிரதான சிஷ்யரும் நம்முடைய குருவுமான சோமசேகர சுவாமிகள் தன் குருவின் கனவை நனவாக்க முனைந்தார். அ தற்காக அவர் காலமெல்லாம் பாடுபட்டு, மெய்வருத்தம் பாராமல், சித்திரங்கள் வரைந்து பொருள் ஈட்டினார். நமது குருவின் உன்னதமான லட்சியத்தை அறியாத மக்கள் பலரும் அவரை பேராசை பிடித்தவர் என்று எண்ணி வந்தனர். ஆனால் நம் குரு, ஊராரின் ஏளனத்தைப் பொருட்படுத்த வில்லை. தனது லட்சியம் நிறை வேறிய பிறகு, நமது குரு கடுந்தவம் செய்ய அடர்ந்த காட்டை நோக்கிச் சென்று விட்டார். இவ்வாறு அவரால் உருவாக்கப்பட்ட தியான மண்ட பத்தை, பிரார்த்தனை, தியானம் ஆகியவற்றுக்குப் பொது மக்களும், நாமும் பயன்படுத்துவோம்!'' என்று சொல்லி முடித்தார்.

மேற்கண்ட வார்த்தைகளைக் கேட்டவுடன் சுபாங்கியின் கண்கள் கண்ணீரால் நனைந்தன. முகத்துக்கு நேரே அவரை நிந்தனை செய்த தன் பாவச் செயலுக்கு என்ன பிராயச் சித்தம் செய்யலாம் என்று துடித்தாள். பிறகு ஒரு முடிவுக்கு வந்தவளாய், மண்டபத்திற்குள் நுழைந்த சுபாங்கி தான் அணிந்திருந்த தங்க சங்கிலி யைக் கழற்றி பிரதான சீடரிடம் நன் கொடையாக அளித்தாள். பிறகு பிராயச்சித்தம் செய்த தெளிவுடன், சுபாங்கி வீடு திரும்பினாள்.





# மாய மந்திரவாதி

## 21

*(காளிவர்மன் சுரங்கப்பாதையில் சென்று கொண்டிருந்த பைரவ முனிவரிடமிருந்து மந்திரக்கோலை கைப்பற்றினான். பிறகு அவன் ஜிதகேது மன்னரின் நந்தவனத்திற்குச் சென்றான். அங்கே ஜிதகேதுவும் மாயக்குரங்கும் பைரவ முனிவரிடம் விசாரணை செய்து கொண்டிருந்தனர். பிறகு...)*

**பை**ரவ முனிவர் சொன்னது மன்னர் ஜிதகேதுவுக்குப் புரியவில்லை. அதனால் எரிச்சல் அடைந்த மன்னர், ''அட முட்டாள் சன்னியாசியே! நான் மந்திரக்கோலைப் பற்றிக் கேட்கிறேன். அது எங்கே?'' என்று கேட்டான்.

பைரவ முனிவர், ''மன்னாதி மன்னா! தாங்கள் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள். நான் சன்னியாசி இல்லை. நான் பைரவ முனிவர். எனக்கும் சன்னியாசிக்கும் என்ன வித்தியாசம் என்றால்....'' ''அடேய், அபத்த பேச்சை நிறுத்து!'' என்று சீறிய மாயக்குரங்கு ''மந்திரக்கோல் எங்கே போயிற்று? அதைப் பற்றி மட்டும் சொல்! அதை நீ எங்கே பார்த்தாய்! உடனே சொல்!'' என்று கத்தியது.

உடனே பெரிய சிஷ்யன் குருவிடம், ''குருவே! உண்மையைச் சொல்லி விடுங்கள். வடக்கு வீதியில் உள்ள சத்திரத்தின் எதிரில் வசிக்கும் சியாமகுப்தனிடம் நாம் அந்த மந்திரக் கோலைப் பார்த்தோம் என்று சொல்லுங்கள்'' என்றான்.

''போதும், போதும்!'' என்ற குரங்கு அதுதான் சிஷ்யனே சொல்லி



மித்யாமிச்ரர் வந்து விட்டார் என்று தோன்றுகிறது. நம்முடைய இடை யூறுகள் நீங்கி நாம் வெற்றி பெறும் நேரம் வந்து விட்டது. துன்முகன், காளிவர்மன், அந்த நயவஞ்சக மந்திரவாதி அனைவரையும் என் குரு தன் சக்தியால் தவிடு பொடியாக்கி விடுவார்!'' என்று உற்சாகத்துடன் கூவிக் கொண்டே, தன் குருவை வரவேற்கக் கிளம்பியது.

அதைத் தடுத்து நிறுத்திய மன்னர், ''மாயக்குரங்கே! நீ எங்கே போகிறாய்? என்னுடைய படை களால் அந்த மாய மந்திரவாதி, ராட்சசன் உக்கிரதண்டன் ஆகியோரை எதிர்த்து வெற்றி கொள்ள முடியாது. இந்த முக்கியமான சமயத்தில் நீயும் என்னை விட்டுப் பிரிந்தால், எனக்குத் துணை யார்?'' என்றார்.

''கவலை வேண்டாம், ராஜா! தங்கள் உயிருக்கு ஒரு ஆபத்தும் நேராது!'' என்று சொல்லிக் கொண்டே குரங்கு ஓடி மறைந்துவிட்டது. அந்தக் காட்சியை நந்தவனத்தில் செடி கொடிகளுக்குப் பின் மறைந்து நின்று கொண்டிருந்த காளிவர்மன் கவனித்துக் கொண்டிருந்தான். மன்னரை சந்தித்து உரையாடலாம் என்று அவன் நினைக்கும் போது, மூச்சிறைக்க அங்கே சூரியபூபதி ஓடி வந்தான். வந்தவன் மன்னரிடம், ''மகாராஜா! என்னுடைய கோட்டைக்கு ஆபத்து! ஒரு பெரிய ராட்சசன் சங்க நாதம் செய்து கொண்டு தன் சகாக்களுடன் என் கோட்டையை பலமாக தாக்கிக் கொண்டிருக்கிறான்.

விட்டானே, இனி குரு அதை ஏன் திருப்பிக் கூற வேண்டும்? மகாராஜா! இந்தக் கணமே அந்த சியாமகுப்தனை கைது செய்யுங்கள்!'' என்றது. உடனே மன்னர் தன் கைகளைத் தட்டி சேவகர்களைக் கூப்பிட்டார். அவர்கள் ஓடி வந்தவுடன், ''இந்த பைரவ சாமியார், அவருடைய சிஷ்யர்கள் ஆகியவர்களை அழைத்துச் சென்று, அந்த சியாமகுப்தனைப் பிடியுங்கள். அவனிடமிருந்து மந்திரக்கோலைக் கைப்பற்றி பத்திரமாக எடுத்து வாருங்கள்!'' என்றார்.

சேவகர்கள் பைராகிகளுடன் செல்லத் தயாராக இருந்தபோது, திடீரென்று தொலைவில் சங்கநாதம் கேட்டது. சங்கநாதத்தைக் கேட்டுத் துள்ளிக் குதித்த மாயக்குரங்கு, ''மகாராஜா! உங்களுக்கு சங்கொலி கேட்கிறதா? என்னுடைய குரு

கோட்டையைத் தகர்க்க அவனுக்கு ஒரு மந்திரவாதி உதவுகிறான். என்னுடைய கோட்டைக்குச் செல்ல எனக்கு அனுமதி தாருங்கள். என் மனைவி, மகள் ஆகியோரை நான் காப்பாற்ற வேண்டும்!'' என்று புலம்பினான்.

மன்னருக்கு மிகுந்த குழப்பம் உண்டாயிற்று. ''இதில் ஏதோ குளறுபடி இருக்கிறது. என்னுடைய கோட்டையைத் தாக்க ஏற்கெனவே ஒரு ராட்சசனும், மந்திரவாதியும் முயன்று கொண்டிருக்கின்றனர். எங்கிருந்து இப்போது திடீரென்று இன்னொரு ராட்சசனும், மந்திர வாதியும் வந்து முளைத்தார்கள்?'' என்று கேட்டார்.

இவ்வாறு மன்னர் ஆழ்ந்த குழப்பத்தில் சிக்கித் தவிக்கையில், செடிகளுக்குப்பின் மறைந்திருந்த காளிவர்மன் வெளிப்பட்டான். ''மகாராஜா! என்னை யாரென்று தெரிகிறதா? இந்த சமயத்தில் நான் உங்கள் பகைவனாக வரவில்லை. ஆகவே தயவுசெய்து வாளை உருவ வேண்டாம். நீங்கள் இப்போது அபாயத்தில் சிக்கியிருக்கிறீர்கள் என்று எனக்கு நன்றாகத் தெரியும். நான் உங்களுக்கு உதவி செய்கி றேன்!'' என்றான்.

இவ்வாறு காளிவர்மன் திடீரென்று தன்முன்னே தோன்றியவுடன் திடுக் கிட்ட மன்னர், பிறகு சமாளித்துக் கொண்டு, ''நீ காளிவர்மன் அல்லவா! உனக்கு நான் மரண தண்டனை விதித்திருந்தேனே,'' என்றார்.



''ராஜா, அது பழைய கதை!'' என்ற காளிவர்மன் தொடர்ந்து, ''அந்த சமயம் என்மீது உங்களுக்குக் கோபம் இருந்தது. உங்களுக்கு அதிகார பலமும் இருந்தது. ஆனால் இப்போது நாற்புறமும் இன்னல்களால் சூழப் பட்டிருக்கிறீர்கள். உங்கள் குழப்பத்தை என்னால் தீர்க்க முடியும்!'' என்றான்.

''அப்படியானால் இதோ இந்த சூரிய பூபதி இன்னொரு ராட்சசனும் மந்திரவாதியும் வந்திருப்பதாகக் கூறுகிறானே, அது என்ன விஷயம்?'' என்று மன்னர் கேட்டார்.

''மகாராஜா! உண்மையில் இப்போது இரண்டு ராட்சசர்களும், இரண்டு மந்திரவாதிகளும் உள்ளனர். இரண்டு மந்திரவாதிகளுக்கும் இடையே நிலவிய பூசலும் விரோத மும்தான் எல்லாத் துன்பங்களுக்கும் மூல காரணம்! பிரம்மபுத்திரா நதி



உள்ளார்கள். என்னை உடனே போக விடுங்கள். என் மனைவி மக்களை நான் காப்பாற்ற வேண்டும்'' என்று பரபரப்புடன் கூறி விட்டு சூரியபூபதி ஓடி விட்டான். குழப்பத்திலிருந்தும், அதிர்ச்சியிலிருந்தும் மீள முடியாமல் தலையைப் பிடித்துக் கொண்ட மன்னர், '' காளிவர்மா! என்ன நடக்கிறது என்று எனக்கு ஒன்றுமே புரியவில்லை. உன் கையில் மந்திரக் கோலும், இ ன்னொரு கையில் வாளும் தென்படுகின்றன. நீயும் நயவஞ்சகமாக என்னைக் கொல்ல வந்திருக்கிறாயா? '' என்று பரபரப் புடன் கேட்டார்.

உடனே காளிவர்மன் அவை இரண்டையும் தரையில் போட்டு விட்டு, ''இப்போதாவது என்னை நம்புங்கள். நான் உங்களுக்கு எதுவும் தீங்கிழைக்க மாட்டேன். இந்த நாட்டையும் தங்களையும் பாதுகாப்ப தையும் என் கடமையாகக் கருதுகி றேன்!'' என்றான்.

உற்பத்தியாகும் இடத்தருகே, ஒரு பழைய பல்லுகேஸ்வரர் கோயில் உள்ளது. அவருடைய பக்தர்களான இரு மந்திரவாதிகளில் ஒருவர் கரடி பாதர். அவருடைய சிஷ்யன்தான் நமக்கு ஏற்கெனவே தெரிந்த மாய மந்திரவாதி. மற்றொரு பக்தர் மித்யாமிச்ரர். அவருடைய சிஷ்யன் தான் இந்த மாயக்குரங்கு. அதுபோல் இப்போதுள்ள இரண்டு ராட்சசர் களும் அண்ணன் தம்பிகள். எங்களுடன் இருப்பவன் உக்ரதண்டன் எனும் ராட்சசன். அவனுடைய தம்பியான காலதண்டன் இப்போது மித்யாமிச்ரரின் வசம் இருக்கிறான்,'' என்றான்.

''மகாராஜா! இப்போது புரிந்து விட்டது! அந்த மித்யாமிச்ரரும், காலதண்டனும் தான் இப்போது என் கோட்டையை முற்றுகையிட்டு உள்ளார்கள். என்னை உடனே போக

காளிவர்மனின் வார்த்தைகளைக் கேட்டு ஆறுதலும், தைரியமும் அடைந்த மன்னர், தன் நன்றியை அவனுக்குத் தெரிவிக்க இருக்கையில், திடீரென சுரங்கப்பதையிலிருந்து துன்முகனும் மாயமந்திரவாதியும் வெளிவந்து அவர்களை அணுகினர்.

துன்முகன் உருவிய வாளுடன், ''காளிவர்மா! உனக்கு ஏதாவது ஆபத்து ஏற்பட்டு விட்டதோ என்று அஞ்சி ஓடோடி வந்தோம். நல்ல வேளை! நீ பத்திரமாக இருக்கிறாய். ஆனால் இந்த கேடு கெட்ட

ஜிதகேதுவை ஏன் இன்னும் உயிரோடு விட்டு வைத்திருக்கிறாய்?'' என்று சீறிய துன்முகனை நோக்கி, ''நிறுத்து துன்முகா!'' என்ற காளிவர்மன் தொடர்ந்து அவனிடம் ''ராஜ வம்சத்தின் மேன்மைக்காக தன் உயிரையே தியாகம் செய்தார் என் தந்தை. அவரது மகனான நான் மகாராஜாவுக்கு சிறிதளவும் தீங்கு இழைப்பதைப் பற்றிக் கனவிலும் நினைக்க மாட்டேன்!'' என்றான். காளிவர்மனுடைய வார்த்தைகள் துன்முகனுக்கு வியப்பளித்தது. அவன் கோபமாக ஏதோ கூற முற்படுகையில் மந்திரவாதி தரையில் இருந்த தனது மந்திரக்கோலை உடனே பாய்ந்து சென்று எடுத்துக் கொண்டான். பிறகு, ''காளிவர்மா! கேள்! என்னுடைய குருவின் பரம எதிரியான மித்யா மிச்ரனும், அவன் வசமுள்ள கால தண்டனும் இந்த கோட்டைக்கு வந்து கொண்டிருக்கிறார்கள். என்னுடைய குரு கரடிபாதருக்கு அவர்கள் ஏதோ தீங்கிழைத்துவிட்டு, பிறகு இங்கே வந்துள்ளார்கள் என்று தோன்றுகிறது. என்னுடைய குருவின் நிலைமையை அறிய என்னுடன் கிளம்பி வா!'' என்றான்.

''நன்றாக இருக்கிறது நீங்கள் சொல்வது!'' என்ற காளிவர்மன் தொடர்ந்து, ''நான் இந்த மண்ணில் பிறந்தவன். என் தாய்நாடு ஆபத்தில் இருக்கும்போது, நான் இதைக் காப்பாற்றாமல் உங்களுடன் ஓடி வர முடியுமா? தயவு செய்து என் கடமையைச் செய்ய விடுங்கள்!''



என்றான். காளிவர்மனின் இந்த வார்த்தைகள் மந்திரவாதியை திகைக்கச் செய்தன. ''காளிவர்மா! நீ அடியோடு மாறி விட்டாய்! இந்த மன்னரை நம்பி மோசம் போகப் போகிறாய்! மந்திரக் கோலைக் கண்டு பிடித்துத் தருபவனுக்கு தனது பாதி ராஜ்ஜியத்தையும், சுவீகார மகளையும் கொடுக்கப் போகிற மன்னரிடம் நீ என்ன எதிர்பார்க்கிறாய்?'' என்றான்.

''அந்தப் பேச்சுக்கே இடமில்லை, மந்திரவாதி!'' என்ற காளிவர்மன் ''மந்திரக்கோல் இப்போது உங்கள் வசம் தான் உள்ளது. ராஜ்ஜியத்திற்கோ, பதவிக்கோ ஆசைப்படுபவன் நான் இல்லை. என் தாய் நாட்டை காக்க வேண்டும் என்பதே என் நோக்கம்!'' என்றான் காளிவர்மன்.

அந்த சமயம் உக்கிரதண்டன், மாயக்கரடியுடன் அங்கே வந்தான். காளிவர்மனின் நாட்டுப்பற்றைக்

கண்டு உணர்ச்சிவசப்பட்ட மன்னர், ''காளிவர்மா! உன்னைப் போன்ற நாட்டுப் பற்றுள்ள ஒருவன் இருந்தால், அது இலட்சம் பேருக்கு சமம். நான் சூரியபூபதியின் மகளை சுவீகாரம் எடுத்துக் கொண்டு, அவளை உனக்குத் திருமணம் செய்து வைப்பது மட்டு மன்றி பாதி நாட்டையும் பரிசாகக் கொடுப்பதற்கு தயாராக உள்ளேன்!'' என்று அறிவித்தார்.

காளிவர்மனையும், மன்னரையும் மாறிமாறிப் பார்த்த மந்திரவாதி, ''நீங்கள் பகற்கனவு காண்கிறீர்கள். இதற்குள் அந்த மித்யா மிச்ரர் சூரிய பூபதியின் கோட்டையைத் தகர்த்து அவனுடைய மகளை சிறைப்பிடித்து சென்றிருப்பான்'' என்றான்.

''எனது இறுதி மூச்சுள்ளவரை, அது நடக்காது!'' என்று கூறி, தன் வாளை உருவினான் காளிவர்மன். ''காளிவர்மா! உனக்குத் துணையாக நானிருப்பேன்!'' என்று உக்கிர தண்டன் கூறினான்.

அப்போது மந்திரவாதி புன்னகை யுடன், ''உக்கிரதண்டா! நீ காளிவர் மனுக்குத் துணையாக இருப்பதில் எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது. உன்னுடைய தம்பியான காலதண்டனை மித்யாமிச்ரன் எப்படியோ மயக்கி அடிமையாக்கி விட்டான். அந்த வஞ்சகனை அழித்து அவனிடமிருந்து உன் தம்பியை வெற்றிகரமாக மீட்பாயாக!'' என்று கூறி மந்திரவாதி புறப்பட்டான்.

மாயக்கரடி சிறிதும் தாமதிக்காமல் மந்திரவாதியைத் தொடர்ந்து பாய்ந்து சென்று, ''மந்திரவாதி குருவே! என்னை நீர் இப்படியே இந்தக் கோலத்தில் விட்டுவிட்டு செல்கிறீரே! இது என்ன நியாயம்? '' என்று மந்திரவாதி செல்லும் பாதையை வழிமறித்து கெஞ்சியது.

உடனே மந்திரவாதியும், ''ஆகா! உன்னை விட்டு விட மாட்டேன். உன் உருவத்தை ப ழையபடி ம ாற்றி விடுகிறேன்!'' என்று கூறி மந்திரக் கோலால் மூன்று முறை கரடியின் தலையைத் தொட கரடி சுய உருவம் பெற்றது. அடுத்த கணமே மந்திரவாதி சுரங்கப்பாதையில் இறங்கி மறைந்து போனான்.

*(அடுத்த இதழில் முடிவுறும்)*





நவீன வேதாளக் கதை

# தேவநாதனின் அபூர்வசக்தி

**த**ன் முயற்சியில் சற்றும் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலை வீழ்த்தினான். பின்னர் அவன் கீழேயிறங்கி அதைத் தூக்கிக் கொண்டு மயானத்தை நோக்கிச் செல்லுகையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னா! நீ எதற்காக உன்னையே இவ்வாறு வருத்திக் கொள்கிறாய்? இவ்வாறு உடல் நோக காடு மேடெல்லாம் சுற்றி அலைவது ஏன்? உன்னுடைய இலட்சியம் தான் என்ன? தங்களுடைய லட்சியத்தை நிறைவேற்றிக் கொள்ள அயராது உழைக்கும் மனிதர்கள் பலர் உள்ளனர். ஆனால் தங்களுடைய



லட்சியத்தை அடைய அவர்கள் தேர்ந்தெடுக்கும் பாதை மிக முக்கிய மானது. தவறான பாதையில் சென்றால் ஒருவனது லட்சியம் நிறை வேறாததுடன், வீண் பழியும் அவதூறும் அவனை வந்தடையும். அத்தகைய மனிதருள் ஒருவரான பாலனின் கதையைக் கூறுகிறேன், கேள்!'' என்றது.

கடற்கரையை ஒட்டியிருந்த சிங்கபுரம் கிராமத்தில் மக்கள் நிம்மதியாக வாழ்ந்து வந்தனர். கிராமத்தின் எல்லையிலுள்ள காட்டில் தேவநாத சுவாமி என்ற யோகி ஆசிரமம் அமைத்து வாழ்ந்து வந்தார்.

கிராமத்து மக்களின் நிம்மதியான வாழ்க்கையைக் குலைப்பதற்கென்றே பலராமன் என்ற ஒரு கிராம அதிகாரி புதிதாக வந் தான். தனது உபரி வருமானத்திற்காக குடிப்பழக்கமே இல்லாமலிருந்த மக்களுக்கு மதுபானக் கடைகளை அறிமுகப் படுத்தி வைத்தான். கிராமத்துப் பெரியவர்களில் சிலர் அதிகாரி பலராமனிடம் மதுபானக் கடை களைப் பற்றி ஆட்சேபம் தெரிவித்த போது ''கிராமப் பஞ்சாயத்துக்கு வருமானம் தேவை. மதுபானக் கடைகளில் கிடைக்கும் விற்பனை வரிப்பணத்தை கி ராம ம க்களின் நன்மைக்குப் பயன் படுத்துவேன்'' என்று கூறி அதில் பாதிப் பணத்தை அவனே சுரண்டிக் கொண்டான்.

அந்தக் கிராமத்தில் வசித்து வந்த கிரிராஜன், மாலதி தம்பதியினருக்கு பாலன், இராமன் என்ற இரு பிள்ளைகள் இருந்தனர். பாலன் மிகவும் தங்கமான பிள்ளை. ஊர் மக்களுக்கெல்லாம் தன்னாலியன்ற உதவிகளை எப்போதும் செய்து வந்த அவனை, ஊரே போற்றிப் புகழ்ந்தது. இரண்டாவது பிள்ளையான இராமன் சுத்த சோம்பேறி. பொறுப்பற்று, ஊர் சுற்றி திரிபவன்.

இரண்டாவது மகனைப் பற்றி அடிக்கடி கவலைப்பட்டு வந்த பெற்றோருக்கு பாலன் சமாதானம் சொல்லி வந்தான். தம்பியை பொறுப் புள்ள, நல்ல பிள்ளையாக மாற்று வதை தன் வசம் விடும்படி அவர் களைக் கேட்டுக் கொண்டான்.

ஊர் மக்கள் குடித்து விட்டு பணத்தையும், உடல் நலத்தையும் பாழாக்குவதைக் கண்ட பாலன், அவர்களை நல்வழிப்படுத்த பல

கதாகாலேட்சபங்களுக்கு ஏற்பாடு செய்தான். அவற்றில் உழைப்பின் மேன்மை மற்றும் மதுபானத்தின் கெடுதல் ஆகியவற்றை வலியுறுத்தும் கருத்துள்ள புராணக் கதைகளை பிரசங்கம் செய்ய வைத்தான். நாளடைவில் மக்கள் பெருமளவில் அந்த நி கழ்ச்சிகளுக்கு வ ர, அ வர்களுடைய மனமும் மாறியது.

இராமனுக்கு தன் அண்ணன் ஏற்பாடு செய்யும் கதாகாலேட்சப நிகழ்ச்சிகள் பிடிக்கவில்லை. தன் அண்ணனைப் பற்றி பலரிடமும் குறை கூறி வந்தான். அவர்களில் தீயவர்கள் சிலரது யோசனைப்படி இராமன் ஒருநாள் பலராமனை சந்தித்து தன் அண்ணனுடைய செயல்களுக்குத் தடை விதிக்கக் கோரினான். பலராமனும் ''முள்ளை மு ள்ளால் எடுப்பது போல், பாலனின் நல்ல குணங்களைப் பயன்படுத்தியே அவனை வீழ்த்த வேண்டும்'' என்று தன் திட்டத்தை விளக்கினான்.

பலராமனது திட்டத்தின்படி, இராமனின் நண்பன் ஒருவன் யோகியைப் போல் வேடம் தரித்து பாலனை சந்தித்து ''உன் குடும்பத்தில் அனைவரும் இராமனை மிகவும் நேசிப்பதாகக் கேள்விப்பட்டேன். ஆனால் அவனோ சோம்பேறியாகவும் பொறுப்பற்றவனாகவும் இருக்கிறான். அவனைத் திருத்துவதற்கு நீ ஒரு காரியத்தைச் செய்யவேண்டும். செய்வாயா?'' என்று கேட்டார்.

பாலன் சம்மததிக்கவே யோகி, ''அப்படியென்றால் இன்றிரவே நீ



தனியாக இராமர் கோயிலுக்குச் சென்று அங்கு கர்ப்ப கிரகத்தில் உள்ள இராமர் சிலையின் கிரீடத்தை எடுத்துக் கொண்டு உன் வீட்டிற்குச் செல். தூங்கிக் கொண்டிருக்கும் உன் தம்பியின் தலையில் சிறிது நேரம் வைத்துவிட்டு மறுபடியும் கோயிலுக்கு எடுத்து வந்து அதை எடுத்த இடத்திலேயே வைத்து விடு. இதை நீ ரகசியமாக செய்ய வேண்டும்' என்றார்.

பாலன் போலி யோகியின் பேச்சை நம்பி அன்றிரவே இராமர் கோயிலுக்குச் சென்றான். பலராமனின் திட்டப்படி கோயில் வாசல் திறந்தே இருந்தது. பாலன் இ தை க டவுளின் சி த்தம் என்று நினைத்தான். சிலையை வணங்கிவிட்டு கிரீடத்தைக் கையில் எடுத்த அடுத்த கொடி இராமனின் நண்பர்கள் கிராமத்தலைவர்



பலராமனும் அங்கு வந்து விட்டனர். அனைவரும் பாலன் மீது சராமாரியாக கேள்விக் கணைகளை தொடுத்தனர். ஆனால் பாலனோ எல்லாம் என் கெட்ட நேரம் என்று மட்டும் கூறிவிட்டு அமைதியாகி விட்டான்.

மறுநாள் இராமர் கோயிலில் கிராம மக்கள் அனைவரும் அழைக்கப் பட்டனர். பலராமன் பாலனை அனைவர் முன்னிலையிலும் திருடன் என்று பழி சுமத்தினான். கிரீடத்தைத் திருடியதற்காக ஐம்பது சவுக்கடி வழங்குமாறு உத்தரவிட்டான்.

இதைக் கேள்விப்பட்ட பாலனின் அன்னை அலறி அடித்துக் கொண்டு அங்கு வந்து தன் மகனிடம், ''மகனே! உன்னைப்பற்றி, உன் நேர்மையைப் பற்றி ஊரே அறியும். நீ இவ்வாறு செய்ததற்கு ஏதோ காரணம் இருக்கிறது. அதை ஊரார் முன் சொல்லிவிடு!'' என்று கதறினாள். எந்த ஆர்பாட்டமும் இல்லாமல் பாலா தன் தாயிடம், ''அம்மா, நான் ஏன் கடவுளின் கிரீடத்தை எடுத்தேன் என்பதைக் கூறினால் இந்தக் கிராமத் திற்கு நல்லதல்ல'' என்றான்.

அவனது வார்த்தையைக் கேட்ட பலராமன் பலமாக சிரித்தான். பின்னர், ''இவன் நல்லவன் போல் நாடகமாடுகிறான். இவனுக்கு விரைவில் தண்டனையை அமல் படுத்துங்கள்'' என்று ஒரு முரடனின் கையில் சாட்டையைக் கொடுத்தான்.

மாலதி பலராமனின் முன் நின்று கொண்டு, ''என் மகன் எந்த கிராமம் நன்றாக இருக்க வேண்டும் என்று நினைத்தானோ அந்தக் கிராமமே இன்று அவனுக்குத் தண்டனை கொடுக்கிறது. அதனால் இந்தக் கிராமம் அழிந்து விடும். இது என் சாபம்'' என்று தரை மீது தன் காலை வேகமாக அடித்தபடி கூறினாள்.

அடுத்த நிமிடம் நிலநடுக்கம் ஏற்பட்டது. கிராமத்திலுள்ள வீடுகள் எல்லாம் விழுந்து விட்டன. அருகில் உள்ள கடலில் கொந்தளிப்பு ஏற்பட்டு கிராமத்தை மூழ்கடித்தது விட்டது.

''நிலம் முழுவதிலும் உப்பு கலந்து விட்டது. இன்னும் சில வருடங் களுக்கு நிலத்தில் எதையும் பயிர் செய்ய முடியாது. பாலாவின் விஷயத்தில் நாம் மிகப் பெரிய தவறு செய்து விட்டோம். நாம் அனைவரும் கடலில் மூழ்கி இறப்பதுதான் இனி ஒரே வழி'' என்று ஒரு கிராமவாசி பரிதவிப்பில் கூறினான்.

அப்பொழுது ம ாலதி, ' 'இந்த விபத்தில் எத்தனையோ பேர் மாண்டு விட்டனர். நாம் தான் எஞ்சி இருக்கி றோம். யோகி தேவநாதனிடம் சென்று முறையிடலாம். அவர் ஏதாவது வழி சொல்லலாம்'' என்றாள்.

அனைவரும் இதற்கு சம்மதித் தனர். தன்னிடம் வந்து தங்கள் துக்கத்தை முறையிட்ட கிராமத்தி னரிடம், ''உங்கள் கிராமத்தை நீங்கள் வாழுமிடமாக ம ாற்றுவதற்கான அபூர்வசக்தி என்னிடம் இருக்கிறது. ஆனால் அதைப் பெறுவதற்கு உங்களில் ஒருவருக்கு விசேஷ தகுதி இருக்க வேண்டும். அதாவது அவன் ஒரு பொழுதும் எந்த விதமான தீய செயல்களையும் செய்யாதவனாக இருக்க வேண்டும். அந்த குணம் பாலனிடம் தான் உள்ளது. அவனால் தான் உங்கள் கிராமத்தை மறுபடியும் நல்ல நிலைமைக்குக் கொண்டு வர முடியும்'' என்றார். இதைக் கேட்டதும் பாலனின் தம்பியான இராமன் முன்னால் வந்து, ''ஐயா, என் அண்ணன் எங்கள் கிராமத்து இராமர் கோயிலிலுள்ள கிரீடத்தை திருடினான். இது தெரிந்திருந்தும் அவனை நல்லவன் என்று நீங்கள் கூறுகிறீர்கள்'' என்றான்.

தேவநாதன் இராமனை பார்த்து விட்டு,'' எனக்கு எல்லாம் தெரியும். பாலன் தான் இதற்குத் தகுதியா னவன்'' என்று பாலனை அருகில் அழைத்து தன்னிடமுள்ள அபூர்வ சக்தியை பாலனுக்கு அளித்தார்.

வேதாளம் கதையைக் கூறி முடித்து விட்டு விக்கிரமனிடம், ''மன்னா! அபூர்வசக்தி கொடுக்கும் விஷயத்தில்



தேவநாதன் தவறு செய்து விட்டார் என்று உனக்குத் தெரியவில்லையா? பாலன் த ன் த ம்பியை ந ல்வழி படுத்துவதற்காக கடவுளின் கிரீடத்தை தன் வீட்டிற்கு எடுத்துச் செல்ல தீர்மானித்தான். இது அவனது சுய நலமில்லாமல் வேறு என்ன? இது எவ்வாறு ஒரு உத்தம புருஷனின் லட்சணமாகும்? ஒரு நல்ல காரியத் திற்காக தீய வழியை நாடுவது நல்ல தல்லவே? தேவநாதன் அபூர்வ சக்தியை பாலனுக்குக் கொடுத்தது தவறு என்று நினைக்கிறேன். எனது கேள்விகளுக்கு விடை தெரிந் திருந்தும் நீ அதையாக இருந்தால் உன் த லை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

அதற்கு விக்கிரமன், ''பலராமன் தன் சுயநலத்திற்காக பாலனின் தம்பியான இராமனை உபயோகித்துக் கொண்டான். இராமனை நல்வழிப் படுத்திவிட்டால் அவனது தீய நண்பர் களுக்கு முற்றுப் புள்ளி வைக்கலாம். தனது தம்பியை நல்வழிப் படுத்துவதற்காக பாலன் கிரீடத்தை எடுத்தானே தவிர அவனுக்காக அல்ல. அதுவுமில்லாமல் அவன் அந்தக் கிரீடத்தை மறுபடியும் வைத்துவிட வே ண்டும் எ ன்பதே எண்ணினான் அந்த எண்ணத்தில்தான் கோயிலுக்கும் வந்தான். பலராமனின் வலையிலும் மாட்டிக் கொண்டான். குற்றமற்றவன் என்றாலும் தண்ட னையை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருந்தான். இவை அவனது தியாக குணத்தையும், சுயநலமற்றவன் என்பதையும் காட்டுகிறது. நல்லது. கெட்டதை நிர்ணயிப்பது ஒருவனின் மனத்தை வைத்துத்தான் முடிவெடுக் கணுமே தவிர அவனது செயலை வைத்து அல்ல. அதனால் பாலனின் செயலில் தெய்வ குற்றம் அறவே கிடையாது. யோகி தேவநாதன் இதை நன்கு அறிவார். அதனால்தான் தன்னிடமுள்ள அ பூர்வசக்தியை பாலனுக்குக் கொடுத்தார். இதில் தவறேதும் இல்லை'' என்றான்.

விக்கிரமனுடைய இந்த சரியான பதிலால் அவன் மௌனம் கலையவே, வேதாளம் மீ ண்டும் முருங்கை ம ரத்தின் மேல் ஏ றிக் கொண்டது.






# முகலாயர்களின் சிறிய சித்திரங்கள்



**சி**றிய அளவிலான சித்திரங்களை இந்தியாவிற்கு அறிமுகப்படுத்திய வர்கள் முகலாய மன்னர்களேயாவர்.

ஷெர்ஷா சூரியிடம் சண்டை இட்டுத் தோற்றபின், முகலாய சக்கரவர்த்தி ஹுமாயுன் பெர்சியா வுக்கு தலைமறைவாக ஓடிப் போனார். ஓராண்டுக்குப் பிறகு இந்தியா திரும்பி வரும்போது, தன்னுடன் பெர்சியாவிலிருந்து அப்துஸ் சமத், முல்லா தோஸ்த் முஹம்மது என்ற இரண்டு ஓவியர் களைத் தன்னுடன் அழைத்து வந்தார். ஹுமாயுனின் புதல்வரான அக்பருக்கு சித்திரப் பயிற்சி அளித்த துடன் அவர்கள் இந்து மற்றும் முஸ்லிம் ஓவியர்களுக்கும் சிறிய அளவிலான சித்திரங்கள் தீட்டப் பயிற்சி அளித்தனர். ஹம்சா-நாமா என்ற நூலை அக்பர் மொழி பெயர்த்தபோது, மேற்கூறிய ஓவியர்களின் ஒத்துழைப்பை நாடினர். 12 பாகங்கள் கொண்ட அந்த நூலுக்குப் பொருத்தமான சித்திரங்கள் வரையும் பணி 15 ஆண்டுகளுக்கு நீடித்தது. பிறகு பாபர்-நாமா, அக்பர்-நாமா என்ற நூல்களை இயற்றும் போதும் மேற்கூறிய ஓவியர்கள் அவற்றைத் தங்களது சிறிய சித்திரங்களால் அழகு படுத்தினர். முகலாயர்களது ஆட்சிக்குப்பிறகு இந்த குறிப்பிட்ட சித்திரக் கலையின் புகழ் மங்கியது. ஆயினும் ராஜஸ்தான், பஹாரி ஆகிய இடங்களிலுள்ள பள்ளிகளில் இந்தக் கலைக்கு புத்துயிர் ஊட்டப்பட்டுள்ளது.



# தண்டனையிலிருந்து தப்ப முடியவில்லை

ஏலகிரியை ஆண்டுவந்த ஹேமச்சந்திர ராஜாவின் ஆட்சியில் ஒரு விநோதமான சட்டம் இருந்தது. கடவுள் வழிபாட்டில் ஈடுபட்டிருக்கும் சமயம், ஒருவன் குற்றவாளியேயானாலும், அவனைக் கைது செய்யக் கூடாது என்பதுதான் அது.

ஆனால் இந்த விநோதமான சட்டத்தை ஏலகிரி நாட்டுப் போக்கிரிகளும் திருடர்களும் தனக்கு சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டனர். திருடன் ஒருவன், தன்னைக் காவலர்கள் பின் தொடருவார்களேயானால் விரைந்து ஏதாவது கோயிலுக்குள் சென்று கடவுளின் சன்னிதியில் கண்களை மூடிக் கொண்டு கடவுளை வழிபடுவது போல் நடிப்பான். சட்டத்தினால் கைகள் கட்டப்பட்ட காவலர்கள் கோயில் வாசலில் திருடனுக்காகப் பொறுமையாகப் பல மணி நேரங்கள் காத்திருப்பார்கள். இறுதியில் பொறுமையிழந்து அவர்கள் சென்றவுடன் திருடனும் தப்பி விடுவதுண்டு.

அத்தகைய சூழ்நிலையில் ஒருநாள் சந்திரஹாசன் என்பவன் காவல்துறை அதிகாரியாக புதிதாக நியமிக்கப் பட்டான். குற்றவாளிகள் சட்டத்தைத் தனக்கு சாதகமாகப் பயன்படுத்தித் தப்பியோடுவதைக் கண்ட சந்திரஹாசன் மன்னரிடம் ''மகாராஜா! இந்த நாட்டின் விநோதமான சட்டத்தினால், ராஜ்ஜியத்தின் நெறி முறைகள் சீர்கெட்டு வருகின்றன. கோயில் என்பது ஒரு புனிதமான இடம். ஆனால் அந்த இடத்தை குற்றவாளிகள் தங்கள் குற்றத்திலிருந்து தப்பித்துக் கொள்ளும் இடமாக மாற்றி கோயிலின் புனிதத்திற்கு களங்கம் உண்டாக்குகிறார்கள். ஆகையால் தாங்கள் நன்கு பரிசீலனை செய்து இந்த சட்டத்தை ரத்து செய்து விடுங்கள்'' என்றான்.

காயத்ரி சங்கரன்

சந்திரஹாசன் மன்னனிடம் சொல்வதில் நியாயம் இ ருந்ததை அவர் அறிந்தார். இருப்பினும் அவர், ''இந்த சட்டம் எங்கள் முன்னோர்கள் காலத்திலிருந்தே அமலுக்கு இருந்து வருகிறது. ஆகையால் இதைதிடீரென ரத்து செய்வது சரியல்ல. இன்னும் கொஞ்சநாள் பொறுத்திருந்து பார்ப் போம்!'' என்றார்.

சந்திரஹாசனும் அத்துடன் விட்டு விட்டாலும், மன்னரின் மனத்தை எப்படி மாற்றுவது என்பது பற்றி யோசித்துக் கொண்டிருந்தான்.

ஒருநாள் திருடன் ஒருவன் திருமணப் பந்தலுக்குள் நுழைந்து மணப்பெண்ணின் ஆபரணங்களை கைப்பற்றிக் கொண்டு ஓடத் தொடங் கினான். செய்தியறிந்த காவலர்கள் திருடனைப் பிடிக்க துரத்தி வந்தனர். விரைவாக ஓடிய திருடன் காட்டுக்குள் புகுந்தான். காட்டுக்குள் ஒரு குடிசையில் நுழைந்த திருடன் அங்கு ஒரு கருங்கல் பாறையின் மேல் சந்தன குங்குமம் பூசப்பட்டிருந்ததை கவனித் தான். உடனே கருங்கல் முன்னால் நின்று கடவுளை வழிபடுவது போல் நடிக்க ஆரம்பித்தான். பின் தொடர்ந்த காவலர்கள் அந்தக் குடிசையினுள் நுழைந்ததும் திருடன் கடவுளைத் தொழும் பாவனையில் இருந்ததால் அவனைப் பிடிக்காமல் தயங்கி நின்றனர்.

திருடன் நிதானமாக கருங்கல் முன் அமர்ந்து கொண்டு சுற்றியிருந்தவர் களைப் பார்த்து, ''இப்போது நான் அம்மனை வழிபடுகிறேன். நீங்கள் வெளியில் போய் நில்லுங்கள்'' என்று உரத்த குரலில் கத்திவிட்டு கண்களை மூடிக்கொண்டு வழிபடுவதுபோல் நடித்தான். ஆனால் சில கணங்களி லேயே காவலர்கள் அவனைப் பிடித்து விட்டனர். கோபத்துடன் கண்களைத் திறந்த திருடன் முன், கருங்கல் காணப்படவில்லை. அதை காவலர்கள் அகற்றியிருந்தனர்.

மறுநாள் நடந்த விஷயத்தைக் கேள்விப்பட்ட மன்னர், சந்திர ஹாசனை மிகவும் பாராட்டினார். மன்னருடைய மனமும் மாறி வழிபாடு செய்பவர்களைக் கைது செய்யக்கூடாது என்ற சட்டத்தை உடனே ரத்து செய்தார்.



## இவரும் ஒரு சிற்பிதான்!




கல்லில் சிலை வடிக்கும் சிற்பிகளைப் பற்றி கேள்விப்பட்டு இருப்பீர்கள். ஆனால் பெங்களூரைச் சேர்ந்த மல்லிகார்ஜுன ரெட்டி முதன் முதலாக தனது வகுப்பறையில் சாக்குக் கட்டியில் உருவங்களை செதுக்கி இருக்கிறார். அவை அற்புதமாக அமையவே, அவற்றை கின்னஸ் பதிவாளர்களுக்கு அனுப்பி வைத்தார். ஆனால் அவை ஏற்கப்படாமல் போகவே சமீபத்தில் கின்னஸ் பிரதிநிதிகளின் முன்னிலையில் பல் குத்த உதவும் குச்சிகளிலிருந்து 28 வளையங்கள் கொண்ட ஒரு நீள சங்கிலியை தயாரித்தார். இதற்கு முந்தைய 1993ஆம் ஆண்டு கின்னஸ் சாதனையில் அமெரிக்கர் பாப் ஷேமியின் 17 வளையங்கள் கொண்ட சங்கிலி. இத்தகைய உலக சாதனை நிகழ்ச்சியுள்ள மல்லிகார்ஜுன ரெட்டியின் சொந்த ஊர் கோலாரிலுள்ள தொப்பனஹள்ளி. பெங்களூரில் விஞ்ஞானப் பட்டப்படிப்பு படிக்கும் இவரது வயது 24.

## 'குளிர்'ச்சியான உண்மை

இந்திய எல்லைப் பகுதியில் உள்ள சியாச்சினில் உஷ்ணநிலை 55 முதல் 60 டிகிரி வரை குறைந்து, உடலையே உறைய வைக்கும். எல்லையைப் பாதுகாத்து வரும் 2000 ராணுவ வீரர்களுக்கு 2 லட்சம் ரூபாய் மதிப்புள்ள, ஆடைகள் வழங்கப்படுகின்றன. சராசரியாக ஒரு வீரருக்கு ஆஸ்டிரியா நாட்டு ஒரு ஜோடி கோஃபக் காலணிகள் (ரூபாய் 7,200), ஸ்விட்சர்லாந்து நாட்டு ஒரு ஜோடி காலுறைகள் (ரூபாய் 1,100), இத்தாலி நாட்டு கையுறைகள் (ரூபாய் 2,100), ஸ்விட்சர்லாந்து நாட்டு ஸ்வெட்டர்கள் (ரூபாய் 18,000), கால்சராய்கள் (ரூபாய் 8,800) ஃபின்லாந்து நாட்டு சட்டைகள் (ரூபாய் 3,400) மற்றும் கானடா நாட்டுத் தொப்பிகள் (ரூபாய் 1,000).



அயல் நாட்டுக் கதைகள் (ஈரான்)

# குதிரை கனைத்தால் அரசுரிமை பெறலாம்



மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே பெர்சியா (இன்றைய ஈரான்) நாகரீகத்தில் சிறந்து விளங்கியது. பெர்சியாவை ஆண்டு வந்த மன்னர்களில் ஸ்மெர்டிஸ் என்பவனும் ஒருவன். அவன் உண்மையான வாரிசு இல்லை. பலவந்தமாக அரசைக் கைபற்றியவன். அவனது கொடுங்கோல் ஆட்சியில் மக்கள் மிகவும் துன்புற்றனர்.

பொதுமக்களுக்கு ஏதும் நன்மை செய்யாவிடினும், ஸ்மெர்டிஸ் தன்னுடைய வசதிகளுக்கு ஒரு குறைவும் வைத்துக் கொள்ளவில்லை. தன்னுடைய வி ரோதிகளிடமிருந்து பாதுகாத்துக்கொள்ள ஒரு மெய்க் காவல் படையை நியமித்துக் கொண்டவன், எதிரிகளின் செயற்பாடுகளை அறிய ஏராளமான உளவாளிகளையும் நியமித்திருந்தான். தனக்கு எதிராகக் கரு த்துகள் கூ றுபவர்களையோ செயல்களில் இறங்குபவர்களையோ அவன் உயிரோடு விட்டு வைப்பதில்லை.

பெரும்பாலான அரசாங்க அதிகாரிகள் கொடுங்கோல் மன்னனுக்கு பயந்து, மௌனமாகப் பணிபுரிந்தாலும், எதிர்ப்பு சக்திகள் ரகசியமாக வளர்ந்து கொண்டே வந்தன. அதிலும் முக்கியமாக அரசாங்கத்து உயர்மட்ட அதிகாரிகள் ஆறுபேர் ஸ்மெர்டிஸுக்கு எதிராக ரகசியமாக சதி ஆலோசனைத் திட்டங்களில் இறங்கினர். கொடுங்கோலனை ஆட்சியிலிருந்து அகற்றி தங்களுள் ஒருவன் அரசாள வேண்டுமென்பதே அவர்களுடைய அவா!

ஒருநாள் அவர்கள் ரகசியமாக ஆலோசனையில் ஈடுபட்டிருந்த சமயம், அவர்களுள் ஒருவன் நாம் அனைவரும் அரசர்கள் ஆக முடியாது. நம்மில் ஒருவன் மட்டுமே ஆள முடியும். மற்றவர்கள் அவனுக்கு ஆலோசனை கூறுபவர்களாக இருக்க வேண்டும். ஆனால் அரசனாகப் போகும் அந்த ஒருவன் யார் என்பதை நாம் தீர்மானிக்க வேண்டும்'' என்றான்.

நம்மில் ஒருவரை திறமையின் அடிப்படையில் தேர்வு செய்வது கடினம். ஆகவே நம்மில் ஒருவரை குலுக்கல் முறையிலோ, அல்லது வேறு ஏதாவது முறையிலோ நியமிக்க வேண்டும். அது எவ்வாறு என யோசிப்போம்'' என்றான் மற்றொருவன். சிறிது நேரம் யோசித்த பின், அவர்களுள் ஒருவன், ''நாளைக் காலை நாம் அனைவரும் ஏரிக்கரையில் நமது குதிரைகள் மீது ஏறி சவாரி செய்து கொண்டே செல்வோம். யாருடைய குதிரை கனைக்கிறதோ, அதன் மீது சவாரி செய்பவன் அரசனாகட்டும்,'' என்றான். அந்த யோசனைக்கு அனைவரும் சம்மதித்தனர்.

மறுநாள் காலை அந்த ஆறு பேரும் ஏரிக்கரையில் தங்கள் குதிரைகள் மீது அமர்ந்து மெதுவாக சென்று கொண்டிருந்தனர். அப்போது டாரியஸ் என்பவன் அமர்ந்திருந்த குதிரை கனைத்தது. உடனே டாரியஸ் எதிர்கால அரசனாகத் தேர்வு செய்யப் பட அனைவரும் அவனுக்கு வாழ்த்துக் கூறினர்.

அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு சில நாள்களிலேயே, கொடுங்கோலன் ஸ்மெர்டிஸ் ஆட்சியிலிருந்து அகற்றப்பட்டு டாரியஸ் அரசனாகப் பொறுப்பேற்றான். ஆனால் தனது குதிரை மட்டும் ஏன் கனைத்தது என்ற ரகசியம் டாரியாசுக்குத் தெரியவில்லை, மற்றவர்களுக்கும் தெரியவில்லை. குதிரையை கனைக்கச் செய்தது டாரியசின் பணியாள் ஒருவன். ஆறு நண்பர்களும் விவாதித்துக் கொண்டிருக்கையில் அதை ஒட்டுக் கேட்ட டாரியசின் பணியாள் எசமானுடைய குதிரையை முதல் நாளே ஏரிக்கரைக்கு இட்டுச் சென்று குதிரைக்குப் பிடித்த தீனியை வயிறாரக் கொடுத்தான். மறுநாள் டாரியசை சுமந்து கொண்டு வந்த அவனுடைய குதிரை ஏரிக்கரையை அடைந்ததும், முதல் நாள் அதே இடத்தில் தான் வயிறார உண்டது நினைவுக்கு வரவே மகிழ்ச்சியில் கனைத்தது.

இவ்வாறு டாரியஸ் கி.மு.521ஆம் ஆண்டில் அரசனாகும் பாக்கியத்தைப் பெற்றான். அவனுடைய பணியாளுக்கு டாரியஸ் பரிசு கொடுத்தானா என்று தெரியாது. ஆனால் டாரியஸ் மிகச்சிறப்பாக ஆட்சி செய்து குடிமக்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தினான். பெர்ஸ்போலிஸ் என்ற புதிய தலைநகரை நிர்மாணித்த டாரியஸ், ''அழகான இவ்வுலகை அமைதிப் பூங்காவாகத் திகழவே இறைவன் படைத்தார்'' என்ற தன் கருத்தினை கல்வெட்டுகளில் பொறிக்கச் செய்தான்.



# THE ADVENTURES OF G-man

## அன்ட்ரோமேனியா

### இருள் சூழ்ந்த பிரதிபலிப்புகள் - பகுதி 1

கொடூரமான அன்ட்ராய்டுகளைக் கொண்ட டெர்ரோலீனின் சேனையுடன் போராட நமது ஹீரோ மற்ற பிரபஞ்சங்களில் உள்ள தனக்கு நிகரான மற்ற ஜீ-மேன்களின் உதவியை நாடுகிறான். இத்தகைய முயற்சியில் தற்போது அவனுனடய உதவிக்கு ஒருவன் இருக்கிறான். தன் முயற்சியில் மீண்டும் ஜீ-மேன் வெற்றி பெறுவானா?

இந்தப் பூமியிலிருந்து
மற்றொரு ஜீ-மேனுடன்
தொடர்பு கொள்ளும் முயற்சி
அத்தனை திருப்திகரமான
பலனைத் தரவில்லை.






ஜீ-மேன்?

நெஜமா அப்படியில்லை என் நண்பனே! நான் என்னை ஆன்ட்டி-ஜீன்னு கூப்பிடறேன். என்னுடைய தேசத்தின் கருப்புத் தலைவன். டெர்ரோலீனை ஒழிக்க காத்திருப்பவன்....

அது சரி, நீ யார்....






சூர்யராஜ் ?

அந்த ஒண்ணும் தெரியாத முட்டாளா ?

நான் தான் அவனை இந்த உலகத்துலேந்து அனுப்பிச்சுட்டேனே. இருந்தாலும் அவன் ஒரு ஹீரோ மாதிரி சண்டை போட்டான்

ஆனா என்ன இருந்தாலும் பலமிருக்கறவன்தான் ஜெயிப்பான்... அப்படிதான் இங்கேயும் நடந்தது..



வேண்டாம் !!
என்னோட ஒரு பகுதியை
சூர்யராஜ் தன்னோட
எடுத்துகிட்டு போனான். நீ இப்போ
வந்தது எனக்கு அந்த கஷ்டமான
தினங்களை ஞாபகப்படுத்துது...
அதனால நீ போலாம்..
இப்பவே !!








எங்க
போயிட்டான்
அவன் ?

அவன் என்ன ஜீ-ஃபோர்ஸ்
ரெட்ல* தாக்கினான்.
இருந்தாலும் நான்
மயக்கமாயிடலை!

என்னைவிட அவன் ரொம்ப
வலில துடிக்கிறான் போல.....
நான் இப்ப மானோ
வியாதிக்கான மருத்துவம்
செய்யணும் போலிருக்கு..

அவனோட சக்தியை
அவனுள் இருக்கும்
கெட்ட எண்ணங்கள்
பலவீனப்படுத்தியிருக்கும்...

அது என்னோட
நன்மைக்குதான்

* ஜீ-போர்ஸ் ரெட்தான் சக்தியின் உச்ச நிலை. சாதாரண மனிதனை இது தாக்கினால் பல வாரங்கள் அவன் செயலிழந்து போவான்...

நல்ல செய்தி என்னதுனா டெர்ரோலீன் செத்து போயிட்டான்.

அதனால் ஆன்ட்டி-ஜீயோட சேந்துகறதுல ஒண்ணும் தப்பு இல்ல .. ஆனா அவனுக்குள்ள இருந்த சூர்யராஜை அவன் ஏன் கொல்லணும்.. ஆச்சரியமா இருக்கு..

எங்களப் போல சூப்பர் ஹீரோக்களுக்கு இரட்டை பர்ஸனாலடிகளை சமாளிக்கறது அத்தன சுலபமானதா இல்லேனு நான் ஒத்துக்கறேன்

அதனால தான் நாங்க சூப்பர் ஹீரோவா இருக்கறோம் வெறும் விதம் விதமான சட்டைய மாட்டிகிட்டு சுத்திகிட்டிருக்கற பைத்தியக்காரங்க இல்ல.. ஆனா ஆன்ட்டி ஜீ பத்தி இதே மாதிரி சொல்ல முடியாது.







ஆண்ட்டி-ஜீ, இந்த மாதிரி இங்கே வந்து உன்னை தொந்தரவு பண்றதுக்கு வருத்தப்படறேன். ஆனா விஷயத்தைத் தள்ளி போட முடியாது...










டெர்ரோலீனை ஆன்ட்டி-ஜீ கொன்றுவிட்டதாக சொன்னால், இப்போது டெர்ரோலீனுடைய இடத்தில் இருப்பவன் யார்? ஆன்ட்டி-ஜீயின் உதவி ஜீ-மேனுக்கு கிடைக்குமா? அடுத்த இதழைப் பார்க்கவும்.




# FIND THE HIDDEN WORDS

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| A | E | R | T | G | D | G | M | A | N | G | H | J | P |
| T | E | R | R | O | L | E | N | E | S | D | F | J | A |
| G | H | H | M | H | F | R | J | U | K | L | G | A | R |
| R | E | D | I | A | R | D | N | I | M | G | L | D | L |
| G | H | J | T | B | N | C | O | R | V | X | U | V | E |
| M | U | F | K | P | A | S | T | Q | P | T | G | U | G |
| M | A | N | T | C | M | N | L | R | D | G | G | H | J |
| A | F | J | U | A | O | N | E | U | R | A | A | L | U |
| C | V | V | J | G | H | K | E | I | K | L | U | Y | J |
| Q | W | O | G | R | F | Z | T | X | Z | D | C | B | M |
| B | R | O | E | H | T | S | T | T | H | O | M | A | S |
| Y | U | H | E | F | G | M | G | U | G | J | U | I | O |
| R | E | D | B | L | U | E | G | R | E | E | N | H | N |
| R | N | B | F | B | M | K | L | U | R | F | O | P | H |
| I | U | Y | G | D | D | T | G | H | W | S | D | R | J |



1. Master of Darkness
2. G-Man's Power Supply
3. The Hero
4. G-Man's Companion
5. The machine that stole childrens mind
6. Terrolene's suit is made of this
7. Suryaraj's rank in the army
8. G-man's power beams
9. The Water Monstor
10. The school where the major teaches
11. What the major teaches at school
12. The villian who stole childrens minds







க்கான பவர் சப்ளை

Visit: www.parleproducts.com




**JIG-ZAW**

Paste the page on cardboard and then cut the page along the lines shown. Your puzzle is now ready. Mix up the pieces and challenge your friends to put it together again

# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி

சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.

கீழ்க்காணும் கதையைப் படியுங்கள்:



அன்று வழக்கம் போல் மன்னருடைய சபை கூடியிருந்தது. திடீரென மன்னர் சபையோர்களைப் பார்த்து, ''என்னுடைய கேள்விக்கு உங்களில் யாரேனும் சரியான பதில் கூறுங்கள் பார்க்கலாம்! உலகிலேயே மிக வேகமாக ஓடும் உயிரினம் எது?'' என்றார்.

உடனே சபையோர்களில் ஒருவர் எழுந்து, ''மகாராஜா! அது புலிதான்!'' என்றார்.

மற்றொருவர், ''இல்லை, மான்தான் மிக வேகமாக ஓடும்!'' என்றார்.

பிறகு ஒவ்வொருவரும் எழுந்து தனக்குத் தோன்றிய விடைகளை அளித்தனர். கடைசியில் விதூஷகர் எனப்படும் ஆஸ்தான நகைச் சுவையாளரின் முறை வந்தது. அவர் ''அரசே! மிக விரைவாக ஓடக்கூடியவன் உலகிலேயே நான்தான்!'' என்று கூற சபையிலிருந்தவர்கள் சிரித்தனர்.

''என்ன உளறுகிறாய்? விளையாடாமல் ஒழுங்காக பதில் சொல்!'' என்றார் மன்னர்.

''மகாராஜா! நான் விளையாடவில்லை. நான் கூறுவது உண்மைதான்!'' என்று விதூஷகர் உறுதியாகச் சொன்னார். பிறகு அதை விளக்கவும் செய்தார்.

- விதூஷகர் தன் பதிலுக்கு என்ன விளக்கம் அளித்திருப்பார்?
- மன்னர் அவர் சொன்னதை நம்பி பரிசு ஏதாவது கொடுத்திருப்பாரா?

உங்கள் விளக்கங்களை 100-150 வார்த்தைகளில் எழுதி ஒரு உறைக்குள் வைத்து அதன் மீது கதைப் போட்டி என எழுதி கீழ்க்காணும் கூப்பனையும் சேர்த்து அனுப்பவும்.

## முடிவு தேதி : ஆகஸ்ட் 31, 2005

பெயர் ------------------------------------வயது-----------பிறந்த தேதி-----------------

பள்ளியின் பெயர் ------------------------------------------------------------------------

வகுப்பு-----------------------------வீட்டு முகவரி---------------------------------------

--------------------------------------------------------------------------------------------

-----------------------------------------------------------------பின்கோடு-------------------

பெற்றோர் கையொப்பம் கலந்து கொள்வோரின் கையொப்பம்

**சந்தமாமா இந்தியா லிமிடெட்**

82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.

மகாராஷ்டிர மாநிலத்து நாட்டுப்புறக் கதை

# தூணாக மாறிய இளவரசர்கள்

பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன், ரத்னகிரியை ஆண்டு வந்த மன்னருக்கு மூன்று புதல்வர்கள் இருந்தனர். மூவரும் நன்கு வளர்ந்து வாலிபப் பருவம் எய்தினர். மூன்று பேரில் திறமையும் தகுதியும் உள்ள இளவரசனுக்கே முடி சூட்டிவதாகத் தீர்மானித்த மன்னர், ஒருநாள் மூவரையும் தன்னிடம் அழைத்தார். ''நீங்கள் மூவரும் நமது ராஜ்ஜியத்தின் வெவ்வேறு திசைகளில் பயணம் செய்து அங்குள்ள மக்களையும், அவர்களுடைய வாழ்க்கை முறையை யும் நேரில் கண்டறிந்து என்னிடம் வந்து சொல்லுங்கள். நாளைக்காலை அரண்மனையை விட்டுப் புறப் பட்டு, மாலைக்குள் திரும்பி வந்து விடுங்கள். பிறகு உங்கள் அனுபவங் களைப் பற்றி என்னிடம் விளக்கிக் கூறுங்கள்'' என்றார்.



அதன்படியே மறுநாள் காலை பொழுது புலர்ந்ததும், மூவரும் தங்களுக்கு வேண்டிய உணவுப் பொருட்களை எடுத்துக் கொண்டு வெவ்வேறு திசைகளில் பயணத்தைத் தொடங்கினர். மூன்று இளவரசர்களில் மூத்தவனான ராஜகீர்த்தி தலை நகரிலிருந்து இடது பக்கம் செல்லும் சாலையில் சென்றான். இரண்டாம வனான ராஜ மூர்த்தி வலது பக்கச் சாலையில் சென்றான். கடைக் குட்டியான ராஜநேசி நேர் சாலையில் சென்றான்.

மூத்தவன் ராஜகீர்த்தி இடது பக்க சாலையில் வெகு தூரம் பயணம் செய்த பிறகு காட்டை அடைந்தான். காட்டுக்குள் புகுந்து சற்று தூரம் சென்றதும், ஓரிடத்தில் மூன்று அழகான குதிரைகள் மேய்ந்து கொண்டிருப்பதைக் கண்டான். அருகிலேயே ஒரு யோகி மரத்தடியில்

அமர்ந்திருப்பதையும் கண்டான்.

உடனே யோகியின் அருகில் சென்று அவரை வணங்கி, தான் யார் என்பதையும் தன் பயணத்தின் நோக்கம் என்ன என்பதையும் எடுத்துக் கூறிய பிறகு, ராஜகீர்த்தி, ''சுவாமி! உங்கள் குதிரைகளில் ஒன்றின் மீது நான் சவாரி செய்ய அனுமதிப்பீர்களா?'' என்றான்.

''தாரளமாகக் செல்! ஆனால் அதிசயமான காட்சியைக் கண்டால் என்னிடம் வந்து அதை சொல். இருட்டுவதற்கு முன் இங்கு திரும்பி வர வேண்டும்!'' என்றார்.

உடனே ராஜகீர்த்தி அங்கிருந்த குதிரைகளில் ஒன்றின் மீது சவாரி செய்தவாறே மேற்கொண்டு பயணம் செய்தான். வெகு தூரம் சென்ற பிறகு அவனுடைய கவனத்தை ஒரு அழகான காய்கறித் தோட்டம் கவர்ந்தது. ஆனால் அந்தத் தோட்டத்தைச் சுற்றி நாற்புறமும் வேலி இருந்ததும் தோட்டத்திற்குள் நுழைவதற்கு வாயிலே இல்லாமல் இருப்பதும் அவனுக்குப் புதிராக இருந்தது. குதிரையிலிருந்து இறங்கி அந்தத் தோட்டத்தை உற்று கவனித்தவனுக்கு இன்னொரு அதிசயம் காத்திருந்தது. சுற்றியிருந்த வேலிக் கம்புகள் ஒவ்வொன்றும் மாயமாக அரிவாளாக மாறி செடிகளில் காய்ந்திருந்த காய்களை வெட்டித் தள்ளின. இதை யோகியிடம் கூறுவதற்கு குதிரையின் மீதேறி குடிலுக்குத் திரும்பி வந்து விட்டான்.

''என்னப்பா? ஏதாவது அதிசயமான காட்சி தென்பட்டதா?'' என்று யோகி அவனைக் கேட்டார்.



உடனே ராஜகீர்த்தி தன் அனுபவத்தைக் கூறியதும், யோகி ''அதிலிருந்து நீ என்ன தெரிந்து கொண்டாய்? '' என்று யோகி அவனைக் கேட்டார். ''எனக்கு ஒன்றுமே புரியவில்லை. எல்லாம் ஒரே மாயமாக இருந்தது'' என்று அவன் பதிலளித்தான்.

''இந்த சின்ன விஷயத்தைக் கூடப் புரிந்து கொள்ள முடியாத நீ ஒரு தூணாக இருக்கத்தான் தகுதியானவன்!'' என்று கூறி தன் சக்தியால் அவனை ஒரு கல் தூணாக மாற்றி விட்டார். அன்றிரவு மற்ற இரு இளவரசர்களும் திரும்பி வந்து விட, ராஜ கீர்த்தியை மட்டும் காணாமல்



மன்னரும் மற்றவர்களும் மிகவும் கவலை அடைந்தனர். காணாமற் போனவனை எப்படித் தேடுவது என்பது பற்றியே இரவெல்லாம் அவர்கள் விவாதித்தனர். இறுதியில் மறுநாள் இரண்டாம் இளவரசனான ராஜமூர்த்தி தலைநகரின் இடது புற சாலை வழியே சென்று மூத்தவனைத் தேடுவது என்பது முடிவாயிற்று. மூன்றாமவன் ராஜநேசி தான் முதல் நாள் சென்ற பாதையில் மலைகளைத் தவிர மக்களைக் காணவில்லை என்பதால் வலது புற சாலையில் செல்வதும் முடிவாயிற்று.

இரண்டாம் இளவரசன் ராஜமூர்த்தி தனது அண்ணன் சென்ற பாதையிலேயே மறுநாள் சென்று, அதே யோகியையும் அவருடைய மூன்று குதிரைகளையும் பார்த்தான். யோகியின் குடிலுக்கு அருகில் நின்ற கல் தூணையும் அதன் முகம் தனது அண்ணனுடைய முகம் போலிருந்ததையும் கவனிக்கவேயில்லை. யோகியை வணங்கிய ராஜமூர்த்தி ''சுவாமி! உங்கள் குதிரைகளில் ஒன்றின் மீது நான் சவாரி செய்யலாமா?'' என்று கேட்டான்.

''தாராளமாகச் செல்! ஆனால் ஏதேனும் அதிசயமான காட்சியைப் பார்த்தால் என்னிடம் வந்து சொல்!'' என்றார்.

குதிரையில் புறப்பட்ட ராஜமூர்த்தி செல்லும் வழியெல்லாம் தன் அண்ணனைத் தேடிக் கொண்டே சென்றான். வழியில் ஓரிடத்தில் ஒரு வயதான கிழவனை ராஜமூர்த்தி பார்த்தான். அவன் கீழேயிருந்த மரக் கட்டைகளைதன் முதுகில் அடுக்கிக் கொண்டிருந்தான். முதுகே வளைந்து போகுமளவிற்கு சுமக்க முடியாமல் ஏராளமான கட்டைகளை அடுக்கிக் கொண்டே சென்றான். அவனுக்கு உதவி செய்ய எண்ணிய ராஜமூர்த்தி, ''ஐயா! உங்களுக்கு நான் உதவி செய்யட்டுமா?'' என்று கேட்டான்.

ஆனால் கிழவன் பதில் சொல்லாதது மட்டுமன்றி, இளவரசனைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. கிழவனுடைய செய்கை விநோதமாக இருக்கவே, ராஜமூர்த்தி அதைப் பற்றி யோகியிடம் சொல்ல வேண்டும் என்று எண்ணி, அப்போதே வந்த வழியிலேயே திரும்பி யோகியிடம் தான் கண்டவற்றை விளக்கினான்.

''உன் உதவியை அவன் ஏன் ஏற்க வில்லை? '' என்று யோகி வின வினார். ''தெரியவில்லை சுவாமி!'' என்றான் ராஜமூர்த்தி.

''இந்த சின்ன விஷயம் எதை உணர்த்துகிறது என்பதைக் கூடப் புரிந்து கொள்ள முடியாத நீ உன் அண்ணனுக்குத் துணையாக இரு!'' என்று கூறி ராஜமூர்த்தியையும் தூணாய மாற்றி விட்டார்.

தனது இரண்டாவது மகனும் திரும்பாதது கண்டு பெரிதும் கவலையுள்ள மன்னரை, கடைசி மகனான ராஜநேசி சமாதானப்படுத்தித் தான் சென்று இருவரையும் அழைத்து வருவதாக வாக்குறுதி அளித்து விட்டுக் கிளம்பினான்.

யோகியின் குடிலை அடைந்த ராஜநேசி யோகியை வணங்கித் தான் தனது சகோதரர்களைத் தேடி வந்த தாகக் கூறினான். உடனே யோகி, ''உன் சகே ாதரர்கள் இருவரு ம் என்னுடைய குதிரையில் சவாரி செய்து திரும்பினார்கள். நான் கேட்ட கேள்விகளுக்கு சரியான பதில் சொல்ல முடியாததால், அவர்களிரு வரையும் தூண்களாக மாற்றி விட்டேன்!'' என்று கூறி அந்த தூண் களைக் காட்டினார். ''என் சகோதரர் களுக்கு உயிர்ப்பிச்சை அளியுங்கள், சுவாமி!'' என்று ராஜநேசி கெஞ்ச, ''நீ இந்தக் குதிரைகளில் ஒன்றின் மீது பயணம் செய்து சுற்றிப் பார்த்து விட்டு அதிசயமான காட்சிகள் ஏதாவது காண நேர்ந் தால், திரும்பி வந்து என்னிடம் சொல்! பிறகு நான் கேட்கும் கேள்விக்கு பதில் அளித்தால், உன்னுடைய சகோதரர்களுக்கு உயிர் கொடுப்பேன்!'' என்றார்.

அதன்படி ராஜநேசி குதிரைகள் ஒன்றின் மீது பயணித்துச் சென்றான். செல்லும் வழியில் தாகம் எடுக்கவே, அருகிலிருந்த ஒரு குளத்தை அணுகினான். குளத்தில் இறங்கிய வுடன், குளத்து நீர் பின் வாங்கிச் சென்று விட்டது. மேலும் சில அடிகள் முன்னால் செல்ல குளத்து நீர் மீண்டும் பின்னே சென்றது. கடைசியில் அ வன் நீ ர் அ ருந்து வதற்குள் குளத்து நீர் முழுதும் மாயமாக மறைந்து விட்டது. தான் கண்ட அந்த அதிசய நிகழ்ச்சியை யோகியிடம் கூறலாம் என்று எண்ணி ராஜநேசி திரும்பினான். தன்னுடைய





அதிசயமான அனுபவத்தை யோகி யிடம் கூறினான்.

''அந்த நிகழ்ச்சியிலிருந்து நீ என்ன தெரிந்து கொண்டாய்?'' என்று யோகி வழக்கப்படி கேட்டார்.

ராஜநேசி த னது மூ ளையைக் கசக்கிப் பிழிந்து, தனக்குத் தோன்றிய தெல்லாம் யோகியிடம் கூறியும், அவர் அந்த பதில்களை ஏற்கவில்லை. ''நீயும் உன் சகோதரர்கள் போலவே அறிவற்றவனாக இருக்கிறாய். அவர் களுக்கு நீ யும் துணையாக இ ரு!'' என்று கூறி, அவனையும் ஒரு தூணாக மாற்றி விட்டார்.

அன்றிரவு மூவரையும் காணாமல் அரண்மனையே அல்லோலப் பட்டது. ஒரே திசையில் சென்ற தன் மூன்று புதல்வர்களும் ஒருவர் பின் ஒருவராய் காணாமற் போனதை எண்ணி, மன்னர் பெருத்த அதிர்ச்சிக்குஉள்ளானார். தன் புதல்வர்களைத் தானே தேடிக் கண்டு பிடிக்க முடிவு செய்து அதே இடது புற சாலையில் சென்று காட்டை அடைந்ததும் யோகியின் குடிலும் யோகியும் அ வருடைய கு திரை களையும் பார்க்க நேரிட்டது.

யோகியை வணங்கிய மன்னர், ''சுவாமி! என்னுடைய மூன்று புதல்வர் களையும் இழந்து பரிதவிக்கிறேன். மூவருமே இந்தப் பக்கம்தான் வந்தார்கள். அவர்களைப்பற்றி....'' என்று மன்னர் சொல்லி முடிக்கு முன், ''ஆம்! அவர்கள் மூவரும் இங்கேதான் வந்தனர். நான் கேட்ட சாதாரணக் கேள்விகளுக்குக் கூட பதில் அளிக்கத் தெரியாத உன் புதல்வர்கள் ராஜ்ஜியம் ஆளத் தகுதியற்றவர்கள் என்று அவர்களைத் தூண்களாக மாற்றி விட்டேன்,'' என்று தூண்களைக் காட்டினார்.

தனது புதல்வர்களின் பரிதாப நிலையைக் கண்டு துடிதுடித்த மன்னர் யோகியிடம், ''சுவாமி! என் புதல்வர்களின் அறிவீனத்தை மன்னித்து விடுங்கள். அவர்களைக் கேட்ட அதே கேள்விகளை என்னைக் கேளுங்கள். அவர்கள் சார்பில் நான் பதில் கூறுகிறேன். எனது பதில்கள் சரியாக இருந்தால், தயவு செய்து என் மகன்களுக்கு உயிர்ப்பிச்சை அளியுங்கள்'' என்று கூ றினார்.

பிறகு யோகி, ''உனது மூத்த மகன்

நாற்புறமும் வேலியால் சூழப்பட்ட ஒரு தோட்டத்தைப் பார்த்தான். வேலிக்கம்புகளே அரிவாட்களாக மாறி காய்களைக் கொய்தன. அதற்கு என்ன பொருள்?'' என்று கேட்டார்.

''வேலியேப் பயிரை மேய்கிறது என்றால் நம்பிக்கைக்குரிய வேலையாள் தன் எசமானுக்கு துரோகம் செய்வதை உணர்த்துகிறது'' என்று விளக்கம் தந்தார் மன்னர்.

''நன்று! உன் இரண்டாம் மகன் ஒரு கிழவனைப் பார்த்தான். தன்னால் சுமந்து நடக்க முடியாது என்று தெரிந்தும் அளவுக்கு மீறி மரக்கட்டைகளை தன் தலையில் ஏற்றினான். அதற்கு என்ன பொருள்? '' என்று கேட்டார் யோகி. ''தன்னால் முடியாது என்று தெரிந்தும் பின் விளைவுகளை அறியாமல் தனது சக்திக்கு மீறி முயற்சி செய்யும் அவன் மிகவும் பேராசைக்காரன் என்று தெரிகிறது'' என்று விளக்கினார் மன்னர்.

''நன்று! உனது மூன்றாம் மகன் நீர் அருந்த குளத்தில் இறங்கினான். குளம் அளவு குறுகி சுருங்கி நீரற்று உலர்ந்து விட்டது. அதன் பொருள் என்ன?'' என்று கேட்டார் யோகி.

''தனது செல்வம் அழிகிறது என்று தெரிந்தும் சுயக்கட்டுப்பாடு இல்லாமல் மனம் போன போக்கில் செலவழிப்பவன் இறுதியில் அனைத்தையும் இழந்து நிற்பான் என்று பொருள்'' என்றார் மன்னர்.

''நன்று! நன்று! மிக சரியாக விடையளித்தீர்!'' என்று மன்னரைப் பாராட்டிய யோகி மூன்று இளவரசர்களையும் உயிர்ப்பித்தார். யோகியை மீண்டும் மனமார வணங்கிய மன்னர், ''தயவு செய்து தாங்கள் என் அரண்மனைக்கு வந்து தங்கி, என் புதல்வர்களுக்குப் பயிற்றுவித்து அவர்களுடைய அறிவுக்கண்களைத் திறக்க வேண்டும் சுவாமி!'' என்று வேண்டினார். யோகியும் அதற்கு சம்மதித்தார்.

அதன்படியே, மன்னரும் இளவரசர்களும் முதலில் அரண்மனையை அடைய யோகி ராஜ மரியாதைகளுடன் அரண்மனைக்குப் பல்லக்கில் அழைத்து வரப்பட்டார்.





# வேலைக்காரியின் மகன்

பிரம்மதத்தன் காசியை ஆண்ட போது போதிசத்வர் ஒரு பெரிய பணக்கார வீட்டில் பிறந்தார். அவர் வளர்ந்து பெரியவராகி மணம் செய்து கொண்டார். அவருக்கு ஒரு மகன் பிறந்தான். அது சமயம் அவரது வீட்டு வேலைக்காரிக்கு ஒரு மகன் பிறந்தான். அ வனுக்கு க டாஹகன் என்று பெயர் வைத்தார்கள்.

போதிசத்வரின் மகனோடு கடாஹகனும் சேர்ந்து இருக்க லானான். அவன் பள்ளிக்கூடம் போகும்போது கடாஹகனும் சென்று அவன் கற்றதை எல்லாம் கற்றுக் கொண்டான். கடாஹகனின் அறிவுக் கூர்மையை எல்லாரும் பாராட்டினர்.

ஆனால் கடாஹகனுக்கு தான் ஒரு வேலைக்காரனைப் போல இருப்பது பிடிக்கவில்லை. தானும் போதி சத்வரின் மகனைப் போல கௌர வமும் அந்தஸ்தும் பெற்று வாழ வேண்டும் என நினைத்தான். அதற்கு அவனுக்கு ஒரு வழி தெரிந்தது.

காசியிலிருந்து சற்று தொலைவில் பிரதியந்தம் என்ற நாட்டின் தலை நகரில் போதிசத்வரின் நண்பர் ஒருவர் இருந்தார். அவர் லட்சாதிபதி. தன் எசமானர் போதிசத்வர் எழுதியது போல கடாஹகன் அவருக்கு ஒரு கடிதம் எழுதினான். அது பின் வருமாறு இருந்தது.

''நான் என் மகனை உங்களிடம் அனுப்பி இருக்கிறேன். நாம் சம்மந்தி களாகலாம் என நான் விரும்புகிறேன். எனவே தாங்கள் தங்களது மகளை என் மகனுக்கு ம ணம் செய்து வைத்து அவனையும் தங்கள் வீட்டிலேயே வைத்துக் கொள்ளுங்கள். நான் பிறகு வந்து தங் களை சந்திக்கிறேன்.'' இப்படி எழுதிய கடிதத்தில் கடாஹகன் தன் எசமானரான போதிசத்வரின் முத்திரையிட்டு எடுத்துக் கொண்டான். தன் எசமானனின் இரும்புப் பெட்டி யிலிருந்து தனக்கு வேண்டிய

-ஜாதகக் கதை-

பணத்தையும் எ டுத்துக் கொண்டு அவன் பிரதியந்த நாட்டின் தலை நகரை அடைந்து போதிசத்வரின் நண்பரான லட்சாதிபதியிடம் கடிதத்தைக் கொடுத்தான்.



லட்சாதிபதியும் அக்கடிதத்தைப் படித்து விட்டு மகிழ்ந்து போனார். கடாஹகனுக்குத் தன் மகளை மணம் செய்து வைத்துத் தன் வீட்டிலேயே வைத்துக் கொண்டார்.

கடாஹகனுக்கு நல்ல உணவும் ஆடைகளும் கிடைத்தன. இவ்வளவு சுகபோகங்கள் இருந்தும் கடாஹகன் ''சீச்சி! இதென்ன சாப்பாடு! இவை என்ன ஆடைகள்! இவ்வளவு அநாகரீகமானவர்களை எங்குமே பார்த்ததில்லை'' என கூறி எல்லார் மீதும் எரிந்து விழுவான்.

போதிசத்வர் திடீரென கடாஹகன் காணாமற்போனது கண்டு அவனைத் தேடப் பலரை அனுப்பினார். அவர் களில் ஒருவன் பிரதியந்த நாட்டின் தலைநகருக்கு வந்தான். அங்கு கடாஹகனைப் பற்றி கிடைத்த தகவலை அவன் போதிசத்வருக்குத் தெரிவித்தான். அவர் மிகவும் வருந்தினார். பின்னர் தானே நேரில் போய் கடாஹகனை அழைத்து வரத் தீர்மானித்து அவர் பிரதியந்த நாட்டிற்குக் கிளம்பினார். தன் எசமானர் வருகிறார் என்ற செய்தி கேட்டு கடாஹகன் நடுநடுங்கினான். எங்காவது ஓடிப் போய் விடலாமா என எண்ணினான். அதனால் தனக்கு எவ்விதப் பயனும் இல்லை எனக் கண்டு தன் எசமானரிடமே எல்லாம் சொல்லி மன்னிப்பு கோருவது எனத் தீர்மானித்தான். அவன் தன் மாமனாரிடம் போய் ''என் தந்தை இங்கே வரப் போகிறாராம். நான் போய் அவரை அழைத்து வருகிறேன்'' என்றான். லட்சாதிபதியும் அவனை அனுப்பி வைத்தார்.

கடாஹகன் தன் எசமானரான போதிசத்வரை சந்தித்து அவரிடம் தான் செய்தது எல்லாம் தவறு என்றும் தன்னைக் காப்பாற்றும் படியும் வேண்டினான். போதி சத்வரும் அதற்கு சம்மதித்தார்.

கடாஹகனுடன் போதிசத்வரைக் கண்ட லட்சாதிபதி மிகவும் மகிழ்ந்து ''தாங்கள் எ ழுதியபடியே த ங்கள் மகனுக்கே என் மகளை திருமணம் செய்து வைத்து இங்கேயே வைத்துக் கொண்டேன்'' என்றார். போதி சத்வரும் மிகவும் திருப்தி அடைந்தவர்

போல காட்டிக் கொண்டார். கடாஹ கனிடம் தன் மகனிடம் பேசுவது போலப் பேசினார்.

பின்னர் அவர் லட்சாதிபதியின் மகளிடம் தனிமையில் ''என்னம்மா! என் மகன் உன்னைசரியாக கவனித்துக் கொள்கிறானா?'' என்று கேட்டார். அவளும் ''அவரிடம் ஒரே ஒரு குறைதான் உள்ளது. சாப்பாட்டிற்கு உட்கார்ந்தால் எதுவும் ருசியாக இல்லை என்று கோபித்துக் கொள் கிறார். அவரை எப்படித் திருப்தி படுத்துவது என்று தான் தெரிய வில்லை'' என்றாள். அப்போது போதிசத்வர் ''கவலைப்படாதே. நான் ஒரு சமஸ்கிருத சுலோகம் சொல்லிக் கொடுக்கிறேன். அதை நீ மனப்பாடம் செய்து கொள். உன் கணவன் சாப்பிடும் போது கோபித்துக் கொண்டால் இந்த சுலோகத்தை உரக்கச் சொல். அவன் அடங்கிப் போவான்'' எனக் கூறி ஒரு சுலோகத்தையும் சொல்லிக் கொடுத்தார்.

அந்த சுலோகத்தின் உட்கருத்து கடாஹகன் பல கட்டங்களில் வசைவுகள் பெற்று வேறு இடத்திற்கு ஓடிப்போய் பொய் சொல்லி பிறரைத் தூற்றிக் கொண்டே சகல சுகபோகங் களையும் உட்கார்ந்த இடத்திலேயே அனுபவிக்கிறான் என்று பொருள். அவன் ம னைவிக்கு ச மஸ்கிருதம் தெரியாததால் அதன் பொருள் தெரிய வில்லை.

போதிசத்வர் சில நாள்கள் இருந்து விட்டுக் காசிக்குக் கிளம்பிவிட்டார். கடாஹகன் முன்போல சாப்பிடும் போது கோபித்துக் கொண்டு ஆர்ப் பாட்டம் செய்யலானான். இரண்டு நாள்கள் பொறுத்த அவனது மனைவி மூன்றாவது நாள் தனக்கு போதிசத்வர் கற்றுக் கொடுத்த சுலோகத்தை உரக்கக் கூறினாள்.

அதைக் கேட்ட கடாஹகனின் சப்தநாடியும் ஒடுங்கி விட்டது. அதன் பொருளை அவன் அறிவான். எனவே போதிசத்வர் எல்லாவற்றையும் தன் மனைவியிடம் கூறி விட்டார் என நினைத்து அவன் தலைகுனிந்து கொண்டான். அதற்குப் பிறகு அவன் மனைவி எதைப் பரிமாறினாலும் அவன் கோபிக்காமல் திருப்தியுடன் சாப்பிட்டான்.





# மகாவிஷ்ணு

சூதரிடம் முனிவர்கள் ''ஐயா, கிருஷ்ண பரமாத்மா கோலோகத்தில் வேறு ரூபத்தில் இருப்பதாகக் கேள்விப்படுகிறோம். அது பற்றி விவரமாக உரைக்க வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்கள். சூதரும் அவர்களது வேண்டுகோளுக்கு இணங்கக் கூறலானார்.

சத்தியலோகத்திற்கும் மேலே கோலோகம் உள்ளது. அது பல நட்சத்திரங்களால் ஒளிமயமாய் விளங்கி வருகிறது. மகாவிஷ்ணு கருநீல நிறத்தில் கருமை வண்ணக் கிருஷ்ணர் என்ற பெயரில் விரஜாநதி என்ற ஆற்றின் கரையில் அமைந்துள்ள துளசிவனத்தில் பிரவேசித்தார். அங்கு அவர் மெய்மறந்து தன் குழலின் இனிய நாதத்தை ஒலிக்க செய்தார். அந்த ஒலி ராதையின் அழகிய வடிவைப் பெற்றது.

கிருஷ்ணனும் ராதையும் ஜோடியாக கோலோகத்தில் இருந்தனர். கிருஷ்ணரை அவரது நண்பர் சுதாமா எப்போதும் தியானித்து வந்தார். ராதையின் உடலிலிருந்து பல கோபிகைகள் பிறந்தனர். விரஜா நதியும் பெண் உருவம் எடுத்து பிருந்தாதேவி என்ற பெயர் பூண்டு கிருஷ்ணரை ஆராதித்து வந்தாள்.

ஒருநாள் கிருஷ்ணரும் ராதையும் தனிமையில் இருக்கையில் அவரைத் தேடிக் கொண்டு விரஜாதேவி வந்தாள். ராதை அதனால் கோபம் கொண்டு அவள் பூலோகத்தில் பிறக்க வேண்டுமென்று சபித்து விட்டாள். அவ்வாறு சாபம் கொடுத்து சரியல்ல என்று



குசேலர் ராதைக்கு எடுத்துச் சொன்னார்.

ராதை கோபம் கொண்டு ''என்னை எதிர்த்துப் பேசிய நீயும் பூலோகத்தில் ராட்சசனாகப் பிறக்கக் கடவாய்'' என்று சபித்தாள். விரஜாதேவி அரச குமாரியாகப் பிறந்து துளசி, பிருந்தா என்ற பெயர்களில் இருந்தாள்.

ராதையின் சாபம் பெற்ற குசேலர் மேலோகத்திலிருந்து பூலோகத்தில் கடலில் விழுந்து தலைமீது வெண் சங்கைக் கட்டிக் கொண்டவனாகப் பிறந்தார். குசேலரும் கிருஷ்ணரும் ஆருயிர்த் தோழர்களாயிற்றே. அதனால் அக்குழந்தையைக் காக்க கிருஷ்ணர் கிருஷ்ணகவசத்தை அக்குழந்தைக்கு அளித்தார். அந்தக் கடலின் கரைமீது தம்பன் என்ற ராட்சசன் தனக்குக் குழந்தை வேண்டுமெனத் தவம் செய்து கொண்டிருந்தான். அப்போது கடலில் பிறந்த குழந்தை அலைகளால் அவன் பக்கம் தள்ளப் பட்டது.

அந்த குழந்தை கடலிலிருந்து கிடைத்ததால் அதற்கு ஜலந்தரன் என்றும், சங்கை அணிந்திருந்ததால் சங்கசூடன் என்றும் அக்குழந்தைக்கு தம்பன் பெயர் சூட்டினான். துளசி விஷ்ணுவையே தன் கணவராக மனத்தில் வரித்து அவரைக் குறித்து தவம் செய்யலானாள். அவளை விஷ்ணுவின் அம்சமான ஜலந்தரன் பார்த்தான்.

ஜலந்தரன் துளசியின் தந்தையான தர்மத்துவஜனைக் கண்டு அவனிடம் அவனது மகளைத் தனக்கு விவாகம் செய்து கொடுக்குமாறு கேட்டான். அவனும் அ தற்கு இ ணங்கவே துளசிக்கும் ஜலந்தரனுக்கும் விவாகம் இனிது நடை பெற்றது. துளசி தன் கணவனைக் கண்கண்ட தெய்வமாகக் கருதி வந்தாள்.

துளசியைக் கண்டு அவளது அழகில் மயங்கி ஜலந்தரன் அவளை மணந்து கொண்டாலும் ராட்சசனாகிய அவனுக்கு அவளது சாது போன்ற குணமும் போக்கும் பிடிக்கவில்லை. விவாகம் ஆனபிறகு அவன் அவளை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. ஆனால் துளசியோ எப்போதும் தன் கணவனின் நினைவிலேயே இருந்து அவனுக்கு எவ்விதக் குறையும் இல்லாமல் பார்த்துக் கொண்டு வந்தாள்.

ஜலந்தரனிடம் கிருஷ்ணகவசம் இருந்ததால் எளிதில் மூன்று லோகங்களையும் வெல்ல முடிந்தது.

கலகம் மூட்டுவதையே தொழிலாகக் கொண்ட நாரதர் ஒருமுறை ஜலந்தரனைக் கண்டு பார்வதியின் அழகை வர்ணித்தார். அது கேட்டு ஜலந்திரன் கைலாசத்தின் மீது படை எடுத்துச் சென்றான். பார்வதியைத் தன்னிடம் ஒப்படைக்க வேண்டும் என்றும் அப்படிச் செய்யாவிட்டால் தன்னோடு போர் புரியவேண்டும் என்றும் அவன் சிவனிடம் எச்சரிக்கை விடுத்தான்.

இது கேட்டு சிவன் கோபம் கொண்டு தம் திரிசூலத்தை அவன் மீது எறிய அது 'டங்' என்ற சத்ததோடு ஜலந்தரனின் கவசத்தில் மோதிக் கீழே விழுந்தது. பார்வதி பயந்து ராதையிடம் முறையிட்டாள்.

ராதையும் ''ஜலந்தரன் சிவனாரின் மூன்றாவது கண்ணின் அக்னியில் இருந்து பிறந்தவன். சிவனாரே அவனை ஒழிக்க வேண்டும். ஆனால் ஜலந்தரனிடம் கிருஷ்ண கவசம் இருப்பதால் அவனை எவ்விதத்திலும் அழிக்க முடியாது. துளசியின் பதிவிரதாத்தன்மை வேறு அவனைப் பாதுகாக்கிறது. விஷ்ணுவின் மாயையால் எதையும் சாதிக்க முடியும். எனவே அவரிடம் சென்று ஏதாவது வழி செய்யும்படிக் கேள்'' எனக் கூறி அனுப்பினாள்.

பார்வதியின் வேண்டுகோளைக் கேட்டு விட்டு மகாவிஷ்ணு ஒரு பிராம்மணனின் வடிவில் ஜலந்தரனிடம் சென்றார். அவர் ஜலந்தரனைப் பலவாறு புகழவே ஜலந்தரனும் பெருமை பொங்கத் தன்



கிருஷ்ணகவசத்தைக் கழற்றி எடுத்து அந்த பிராம்மணனுக்குத் தானமாகக் கொடுத்தான்.

அதன்பின் விஷ்ணு ஜலந்தரனின் உருவம் எடுத்துக் கொண்டு ஜலந்தரனின் மனைவி துளசியைக் காணச் சென்றார். அச்சமயம் கைலாசத்தில் ஜலந்தரனுக்கும் சிவனாருக்குமிடையே பலத்த சண்டை நடந்து கொண்டிருந்தது.

ஒருமுறை தேவலோகப் பெண் கண்டகி என்பவள் பூலோகத்திற்குப் போய் விஷ்ணுவைக் குறித்துத் தவம் செய்தாள். விஷ்ணுவும் அதனால் மகிழ்ந்து அவள் முன் தோன்றி ''உனக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டார். அவளும் ''தேவதேவா! உங்களை என்னுள் ஒரு ரத்தினத்தை வைத்துக் காப்பதுபோலக் காக்க விரும்புகிறேன்'' என்றாள்.



விஷ்ணுவும் ''நீ கண்டகி என்ற நதியாக பிரவகித்து ஓடு. உன் நீரினுள் நான் சாலிக்கிராம வடிவில் இருக்கிறேன்'' என்றார். கண்டகியும் நதியாக மாறினாள். ஒரு நாளும் ஏறெடுத்துப் பாராத தன் கணவன் வந்தானே எனத் துளசி மகிழ்ந்து அவனது கால்களில் விழுந்து தன் உயிரே போனது போலாகி விட்டாள். அதே சமயத்தில் உண்மையான ஜலந்தரனைச் சிவனார் தம் திரிசூலத்தால் குத்திக் கொன்றார். ஜலந்தரனின் தலை துண்டிக்கப்பட்டு அது கீழே தன் நினைவில்லாத துளசியின் கைகளில் வந்து விழுந்தது.

அப்போது துளசி தன் நினைவு பெற்று எழுந்து தன் கணவனின் தலை தன் கையில் இருப்பது கண்டு திகைத்தாள். அப்போது விஷ்ணு சுய உருவில் அவளுக்குத் தோன்றினார். அவள் கோபம் கொண்டு ''விஷ்ணுவே. என்னை ஏமாற்றிய நீ கல்லாகப் போ'' என்று சாபம் கொடுத்தாள்.

விஷ்ணுவும் ''துளசி! நீ கொடுத்த சாபத்தை மகிழ்ச்சியுடன் ஏற்கிறேன். உன் கணவன் ஜலந்தரன் யாரோ என்று நினைக்காதே. அவன் குசேலர். நான் வேறு அவன் வேறு என்று கிடையாது. என் அம்சமான ஜலந்தரனை மணந்து கொண்டு பதிவிரதா தர்மத்தோடு இருந்து வந்தாய் . புனிதமான நீ உலகில் துளசிச் செடியாக இருந்து புனிதத்தின் சின்னமாக விளங்குவாய். நான் எப்போதும் துளசி மாலையையும் அதனால் அர்ச்சனை செய்யப்படுவதையுமே பெரிதும் விரும்புவேன்'' என்றார்.

விஷ்ணு சாலிக்கிராம வடிவில் கண்டக நதிக்குள் அவதரித்தார். துளசி தன் கணவனின் உடலோடு உடன் கட்டை ஏறியபின் பூஉலகில் துளசிச் செடியாக முளைத்தாள். கண்டகி நதியிலிருந்த சாலிக்கிராமம் ஆரம்ப முதல் துளசி இலைகளால் பூசிக்கப் பட்டது.

ஒரு முறை முனிவர்களிடையே திரிமூர்த்திகளில் யார் உயர்ந்தவர் என்ற விவாதம் மூண்டது. அதன் முடிவைக் காண அவர்கள் பிருகு முனிவரை அனுப்பினார்கள். அவர் சத்திய லோகத்திற்குச் சென்றார். அங்கு சரஸ்வதி தேவியின் வீணா கானத்தில் பிரம்மா மூழ்கி இருந்த தால் பிருகு வந்ததை அவர் பார்க்கவே இல்லை.

அங்கிருந்து பிருகு கைலாசத்திற்குச் சென்றார். அங்கு சிவனார் பார்வதி தேவியுடன் நடனம் புரிந்து கொண்டு இருந்ததால் பிருகு வந்ததை கவனிக்க வில்லை. இந்த இரு தோல்விகளால் ஆத்திரமும் கோபமும் கொண்ட அவர் வைகுண்டத்திற்குச் சென்றார்.

அங்கு லட்சுமிதேவியோடு விஷ்ணு சேஷசயனத்தில் இருந்து பேசிக் கொண்டிருந்தார். பிருகுவை அவரும் கவனிக்கவில்லை. அதனால் அவர் கோபம் கொண்டு மகா விஷ்ணுவின் மார்பில் தம் காலால் எட்டி உதைத்தார். விஷ்ணு பிருகுவின் கால்களைப் பற்றி எடுத்துத் தம் தலை மீது வைத்துக் கொண்டு ''முனி சிரேஷ்டரே! உங்களது மெல்லிய பாதங்கள் என் கடினமான மார்பில் பட்டதால் வலிக்கிறதா?'' எனக்கூறி ஒத்தடம் கொடுக்கலானார். அவர் விஷ்ணுவைத் துதித்து வணங்கிவிட்டு மற்ற முனிவர்களிடம் போய் அவரது உயரிய பண்பைக் கூறினார்.

விஷ்ணுவின் மார்பில் இருந்த லட்சுமிதேவியோ பிருகு முனிவர் தன்னை உதைத்தார் எனக் கோபம் கொண்டு பூலோகத்திற்கு வந்து அங்கு ஓரிடத்தில் தவத்தில் மூழ்கி விட்டாள். விஷ்ணுவும் ஒரு வாலிபனாக உருவம் எடுத்துக் கொண்டு லட்சுமிதேவியைப் பூவுலகில் தேடலானார். அவர் ஸ்ரீனிவாசன் என்ற பெயரில் வருணா தேவியின் ஆசிரமத்தை அடைந்தார். வருணாதேவி கிருஷ்ணாவதாரத்தின் போது யசோதையாக இருந்தவள்.



வெகு காலத்திற்குப் பின் கிருஷ்ணர் தன்னிடம் வந்ததால் மகிழ்ந்து ''உனக்குக் கல்யாணம் செய்து வைத்து மகிழ விரும்புகிறேன்'' என்றார். கிருஷ்ணரும் அவளது மகன் ஸ்ரீனிவாசனாக இருந்தார். அப்போது ஆகாசராஜனின் புதல்வி பத்மாவதி தன் தோழிகளுடன் காட்டில் ஓடி ஆடித்திரிந்து ஸ்ரீனிவாசன் இருக்கும் பகுதிக்கு வந்தாள்.

அச்சமயம் மதம் பிடித்த ஒரு யானை வரவே பத்மாவதியை அவளது தோழிகள் விட்டு விட்டு பயந்து ஓடி விட்டார்கள். அப்போது பத்மாவதி நினைவிழந்து விழ ஸ்ரீனிவாசன் அங்கு வந்து யானையை நிறுத்தி அவளைத் தூக்கி நிறுத்தினார். இருவரும் ஒருவரையொருவர் மனதார நேசித்தனர். பத்மாவதி முன் பிறப்பில் வேதவதியாக இருந்தவள். வருணா சப்தரிஷிகளுடன் ஆகாச ராசனின் அரண்மனைக்குப் போய்த் தன் மகன் ஸ்ரீனிவாசனுக்கு அவனது மகளை விவாகம் செய்து வைக்கு மாறு கேட்டாள். பத்மாவதியின் விவாகம் ஸ்ரீனிவாசனுடன் குபேரன் அனுப்பிய ஏராளமான பணத்தால் சிறப்பாக நடைபெற்றது.

நாரதர் தவம் செய்து கொண்டிருந்த லட்சுமிதேவியிடம் இந்த விவாகம் பற்றிக் கூறவே அவள் கோபம் கொண்டு கிளம்பினாள். லட்சுமி தேவி வரும் கோலத்தைக் கண்ட ஸ்ரீனிவாசன் மனைவி பத்மாவதியை ஓரிடத்தில் இருக்க வைத்துவிட்டு சட்டென ஏழுமலைகள் மீது ஏறி கடைசி திருமலை மீது நின்று லட்சுமியை எதிர்பார்க்கலானார்.

லட்சுமிதேவி வந்ததும் அவர் புன் சிரிப்பு சிரித்து கருநிறச்சிலையாக மாறிவிட்டார். இவரே வேங்கட ரமணன், வேங்கடேசுவரர் எனப் பெயர் பெற்று பக்தகோடிகளால் ஆராதிக்கப்பட்டார். பத்மாவதி நின்ற இடம் அலமேலு மங்காபுரமாகியது.

மகாவிஷ்ணுவின் திருவிளை யாடல்களை விவரமாகக் கேட்ட முனிவர்கள் ஒரேயடியாக மகிழ்ச்சிக் கடலில் மூழ்கிப் போய் அவரைத் துதிக்கலானார்கள்.





# மோகினிப் பிசாசு

ஒரு கிராமத்தில் வாணி, வர்மா என்ற பெயர் கொண்ட தம்பதி மிகவும் ஒற்றுமையாக வசித்து வந்தனர். ஒருவர் மீது ஒருவர் பரஸ்பரம் ஆழ்ந்த அன்பு பூண்டிருந்த அந்த தம்பதியை மெச்சாத வர்களே அந்த கிராமத்தில் இல்லை.

ஒருநாள் இரவு கன மழை பெய்து கொண்டிருக்கையில், வர்மாவின் வீட்டு வாயிற்கதவை யாரோ தட்டி னார்கள். தகவைத் திறந்ததும், மழையில் நனைந்து கொண்டிருந்த ஒரு தம்பதி தென்பட்டனர்.

''நகரத்திற்குச் சென்று கொண்டு இருந்த சமயம் திடீரென மழை பிடித்துக் கொண்டது. உங்கள் வீட்டில் இன்றிரவு தங்க இடம் அளிப்பீர்களா?'' என்று அவர்கள் கேட்டனர்.

இயற்கையிலேயே மிக நல்ல குணம் படைத்த வாணி அவர்களை வர வேற்றாள். அவர்களுக்கு உணவு தந்து உபசரித்து, அவர்கள் தூங்குவதற்கு வேண்டிய வசதிகளையும் செய்து கொடுத்தாள். சாப்பிட்ட பின் மிகக் குறைவான உணவே மிஞ்சியிருந்தது. மழையில் விறகு நனைந்து விட்டதால், மீண்டும் சமையல் செய்ய முடியாதென அறிந்த வாணி, தன் கணவனை நோக்கி சாப்பிடச் சொன்னாள். ஆனால் வர்மா, அதற்கு ஒப்பவில்லை. இருப்பதை பகிர்ந்து கொள்வோம் என்று சொல்லி விட்டு இருவரும் சேர்ந்து உண்டு விட்டு படுக்கச் சென்று விட்டனர்.

மறுநாள் காலை அழுகுரல் கேட்டு, வாணிக்கும் வர்மாவிற்கும் தூக்கி வாரிப் போட்டது. எழுந்து வந்து பார்த்தால் நேற்றிரவு வந்து தங்கிய விருந்தாளிப் பெண்மணிதான் அழுது கொண்டிருந்தாள். அவளிடம் அதற் கான காரணத்தைக் கேட்டனர்.

அதற்கு அவள், ''ஐயா! நேற்று உங்கள் மனைவி வாணி உங்களிடம் மிகவும் பிரியத்துடன் நடந்து கொண்டதைப் பார்த்த என் கணவர், மனைவியென்றால் இப்படியல்லவா அன்புடன் இருக்க வேண்டும்! நீயும் இருக்கிறாயே பிசாசே!'' என்று



என்னைத் திட்டினார். பிறகு ''உன்னுடன் வாழவேப் பிடிக்கவில்லை'' என்று சொல்லி இரவே என்னை விட்டு ஓடி விட்டார்'' என்றாள் விசும்பிக் கொண்டே. உடனே வாணி, ''பெண்ணே! உன் பெயர் என்ன? '' என்று கேட்க, அவள் ''சந்திரமதி'' என்று சொன்னாள். வாணி தொடர்ந்து, ''சந்திரமதி! மனம் கலங்க வேண்டாம்! என் கணவர் உன் புருசனைத் தேடி அழைத்து வருவார். நீ இங்கேயே தங்கலாம்!'' என்று சமாதானப் படுத்தினாள். சந்திரமதியும் அதற்கு ஒத்துக் கொண்டு அங்கே தங்கினாள். தினமும் வர்மா அவள் புருஷனைத் தேடியலைந்தும், அவன் அகப்படவில்லை. இவ்வாறு ஒரு மாதம் கழிந்தது.

சந்திரமதி வாணி தம்பதியுடனே தங்கி விட்டாள். அவர்களுக்குப் பாரமாக இருக்க வேண்டாம் என்று கருதி, சமையல் பொறுப்பை சந்திரமதி தானே எடுத்துக் கொண்டாள். நாளடைவில் வாணி குடும்பத்தில் ஒருத்தியாகவே அவள் மாறி விட்டாள்.

அப்படியிருக்கையில் வர்மாவின் இளமைக்கால நண்பனான முரளி ஒருநாள் அங்கு வந்தான். மூன்று மாதங்களுக்கு ஒருமுறை அவன் இவ்வாறு வந்து வர்மாவின் வீட்டில் தங்கிப் போவதுண்டு. இந்த முறை அவர்கள் வீட்டில் சந்திரமதியைக் கண்டதும் வியப்படைந்த முரளி அவள் யாரெனக் கேட்க, வர்மா அவளைப் பற்றிய விவரங்களை எடுத்துரைத்தான். அன்றிரவு வழக்கப்படி சந்திரமதி சமையல் செய்து அனைவருக்கும் பரிமாற, உண்ட பின்னர் எல்லாரும் உறங்கச் சென்றனர். வர்மாவும் வாணியும் ஓர் அறையில் உறங்க, சந்திரமதி சமையல் அறை அருகிலேயே உறங்க, முரளி வீட்டிற்கு வெளியில் கட்டில் போட்டு உறங்கினான்.

அன்றிரவு ஏதோ சத்தம் கேட்க, முரளி விழித்துக் கொண்டான். வீட்டுக்குள்ளே சென்று பார்த்தால், சமையல் அறை ஜன்னல் கதவைத் திறந்து வைத்து சந்திரமதி யாருடனோ பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தான். சற்று நேரத்திற்குப் பிறகு அவள் ஒரு தட்டில் உணவு எடுத்து வைத்துக் கொண்டு கொல்லைப்புறக் கதவைத் திறப்பது தெரிந்தது. சந்திரமதியின் செய்கையினால் சந்தேகம் உண்டாக, முரளி ஒளிந்திருந்து பார்த்தான். கொல்லைப் புறத்தில் நின்றிருந்த அந்த ஆள் அவள் கொண்டு வந்த உணவுத் தட்டை வாங்கிக் கொண்டு பின்பு ஆவலுடன் உண்பது தெரிந்தது.



பிறகு அந்த ஆள் சந்திரமதியிடம், ''எத்தனை நாள்தான் இப்படி நடு இரவில் வந்து நான் திருட்டுத்தனமாக சாப்பிடுவது? சீக்கிரமாக நீ பணப் பெட்டியின் சாவியைக் கைப்பற்று. இருக்கும் பணத்தையெல்லாம் எடுத்துக் கொண்டு ஓடி விடலாம்!'' என்றான்.

அதற்கு சந்திரமதி ''கொஞ்சம் பொறுமையாக இருங்கள். பணப் பெட்டி சாவியை எப்படியாவது கண்டு பிடித்து எடுக்கிறேன். பிறகு பணத்தைத் திருடலாம்'' என்றாள் சந்திரமதி.

ஒளிந்திருந்து அத்தனையும் கேட்டுக் கொண்டிருந்த முரளிக்கு எல்லாம் புரிந்து விட்டது. கொல்லைப்புறத்தில் நிற்பவன் சந்திரமதியின் கணவன் என்பதும், அவர்கள் இருவரும் வாணி தம்பதியினரை நம்பவைத்து நாடகமாடி பணத்தைத் திருடத் திட்டமிட்டுள்ளனர் என்றும் புரிந்தது. 'இந்த திருட்டு தம்பதியின் சூழ்ச்சியை தந்திரமாக முறியடிக்க வேண்டும்!' என்று முரளிக்குத் தோன்றியது. உடனே சத்தம் செய்யாமல் முரளி மீண்டும் வெளியில் வந்து கட்டிலில் படுத்துக் கொண்டான்.

மறுநாள் காலை முரளி, வர்மாவிடம் ''வர்மா! உங்கள் வீட்டில் ஒரு மோகினிப் பிசாசு உலவுகிறது. நேற்றிரவு அது சலங்கைகள் கட்டிக் கொண்டு உன் வீட்டு வாசலில் நடமாடியது. என்னைக் கட்டிலோடு சேர்த்துத் தள்ளி விட்டது!'' என்றான். அதைக் கேட்டு வாணி, வர்மா மட்டுமல்ல, சந்திரமதியும் அதிர்ச்சி அடைந்தாள். ''அடடா! நீங்கள் பயப்பட வேண்டாம்! நான் அந்த மோகினிப் பிசாசைவிரட்டி விடுவேன்!'' என்று கூறி சமாதானப் படுத்தினான். பிறகு கடைக்குப் போய் ரகசியமாக ஒரு சலங்கை வாங்கி வந்தான்.

அன்றிரவு முரளி ரகசியமாக வீட்டுக் கொல்லைப்புறம் சென்று கதவைத் தட்டினான். அவன் எதிர்பார்த்தது போல் சந்திரமதி உணவுத் தட்டுடன் வெளியே வந்தாள். அதை வாங்கிக் கொண்டு இருளில் மறைந்த முரளி மீண்டும் வாயிற்புறமாக வீட்டிற்குள் நுழைந்து, சந்திரமதியின் கட்டிலுக் கருகில் அதை வைத்து விட்டு, அவளுடைய கட்டிலையும் நகர்த்தி விட்டான். பிறகு சத்தமாக சலங்கையை பல முறை குலுக்கினான்.

தன்னுடைய கணவன்தான் வந்து இருக்கிறான் என்று நினைத்த சந்திரமதி, உணவுத்தட்டுடன் இருளில் மறைந்தவன் ஏன் இன்னும் தன்னுடன் பேசாமல் இருக்கிறான் என்று குழப்பம் அடைந் தாள். அந்த நேரம் சலங்கை ஒலி கேட்டதும், அன்று காலை முரளி குறிப்

பிட்ட மோகினிப் பிசாசின் ஞாபகம் வந்தது. ''ஐயோ! பிசாசு!'' என்று பயத்துடன் உள்ளே வந்த சந்திரமதியின் கண்களில் அவள் கட்டி லுக்கு அருகில் உணவுத் தட்டு தென்பட்டது. அவள் கட்டிலும் இடம் மாறி இருந்தது.

வந்திருப்பது மோகினிப் பிசாசுகள் என்று நினைத்த சந்திரமதி பயத்தில் 'வீல்' என்று அலறினாள். வாணியும், வர்மாவும் ஓடிவர, முரளியும் ஒன்றுமே தெரியாதவன்போல் அங்கு வந்து அப்பாவியாக நின்றான்.

அன்றுமுதல் இரவில் அடிக்கடி சலங்கை ஒலியை முரளி உண்டாக்க, சந்திரமதி பயந்துபோய் எழுந்திருப்ப தையே நிறுத்தி விட்டாள்.

இது நடந்து மூன்று நாள்கள் கழித்து, ஓரிரவு சந்திரமதியின் கணவன் ரகசிய மாக கொல்லைப்புறம் செல்வதை முரளி பார்த்தான். உடனே அவனிடம் சென்று, ''சொந்த மனைவிக்கு துரோகம் நினைக்கலாமா? '' என்று சொல்ல, அதைக் கேட்ட சந்திரமதியின் கணவன் திடுக்கிட்டான்.

''ஐயா, நீங்கள் யாரைப் பற்றிச் சொல்கிறீர்கள்? '' என்று முரளியைக் கேட்டான்.

''இதோ, இந்த வீட்டில் இருக்கி றானே வர்மா! அவனைப் பற்றித்தான்'' என்றான் முரளி. தொடர்ந்து, ''என்னுடைய சகோதரி வாணியின் புருஷன் இந்த வர்மா. அவன் ஒரு அனாதைப் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளப் போகிறானாம். அந்தப் பெண்ணும் சம்மதித்து விட்டாள். அந்தப் பெண் சந்திரமதி ஒரு துரோகி!'' என்று கூச்சலிட்டான். அதைக் கேட்ட சந்திரமதியின் கணவனுக்கு பலத்த அதிர்ச்சியும், தன் மனைவி மீது சந்தேகமும் உண்டாயிற்று.

மறுநாளே அவன் வர்மா வீட்டிற்குள் வந்து, ''நான் செய்த தவறை உணர்ந்து கொண்டேன். அவளைத் திருப்பி அழைத்துச் செல்கிறேன்'' என்று மனைவியுடன் கிளம்பி விட்டான்.

பல நாள்களாய் தங்களுக்கு உதவியாய் இருந்த சந்திரமதி திடீரென வீட்டை விட்டுப் போய் விட்டதால், வாணி தம்பதி வருத்தப்பட்டனர். ''அடப் பைத்தியங்களா! சந்திரமதியும் அவள் கணவனும் உங்களை ஏமாற்றிப் பணம் திருட நாடகம் போட்டார்கள்!'' என்ற முரளி எல்லாவற்றையும் அவர் களுக்கு விளக்கிக் கூறினான்.



# சூர்யா

25

சாந்திபுரத்தைச் சேர்ந்த புரட்சி வீரர்கள் அமிருதபுரியில் திரண்டு, வீரசிம்மனை வீழ்த்தி சரியான சந்தர்ப்பத்தை நாடிக் காத்திருக்கின்றனர். அவர்களுடைய தலைவனான வசந்தன், ஜெயானந்த முனிவரின் ஆசிரமத்திலே, இளவரசன் சூர்யாவுடன் தங்கியிருக்கிறான். ரகசியமாகப் புதைந்து இருக்கும் கஜானாவைப் பற்றி வசந்தனுக்கு நினைவூட்டும் ஜெயானந்தர், அதிலுள்ள செல்வம் பொதுமக்களின் நன்மைக்குப் பயன்பட வேண்டும் என்று கூறுகிறார்.

## வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்

ஓவியம் : காந்தி அய்யா

வசந்தனும், சூர்யாவும் சில ஆட்களுடன் புதைந்திருந்த கஜானாவின் அருகே உலவுகின்றனர்.

பகல் வேளையில் இங்கே வரப்போவதாக வீரசிம்மனும், ஜபர்சிங்கும் பேசிக் கொண்டிருந்ததை நான் கேட்டேன்.

வா, உள்ளே சென்று என்ன இருக்கிறது என்று பார்ப்போம்!

நமக்கு ஒரு மாட்டு வண்டி தேவைப்படும்.

இப்போதே ஏற்பாடு செய்கிறேன்

இங்கு இன்னொரு பெட்டியும் உள்ளது.

இருக்கட்டும். அது நமக்குத் தேவைப்படும்.

வீரர்கள் கஜானாவைக் காவல் காக்க, வசந்தனும், சூர்யாவும் வெளியே வந்து மாட்டு வண்டிக்காகக் காத்திருக்கின்றனர்.

யாரோ வரும் காலடி சத்தம் கேட்கிறது. உடனே வசந்தனும் சூர்யாவும் ஒளிந்து கொள்கின்றனர்.

ஜபரால் அனுப்பப்பட்ட வீரர்கள் பதற்றத்துடன் அங்கு வருகின்றனர்.

மயானம் போல் இருக்கும் இந்த இடத்திற்கு எதற்காக காவல் இருக்க வேண்டும்?

சற்று நேரம் இருந்து விட்டுச் சென்று விடலாம்.

ஜபரின் வீரர்களை எதிர்பாராத விதமாக, சூர்யாவும், வசந்தனும் அமுக்கிப் பிடிக்கின்றனர்.



வசந்தனுடைய வீரர்கள் ஜபரின் ஆட்களின் முகத்தில் சில மூலிகைப் பச்சிலைகளின் சாறைப் பிழிகின்றனர். அவர்கள் மயக்கமடைகின்றனர்.



அவர்களை வசந்தன் கயிற்றினால் கட்டி விடுகிறான்.




ஒரு ஆள் மாட்டு வண்டி ஓட்டிக் கொண்டு வருகிறான்.




வீரர்கள் பெட்டிகளை வண்டியில் எடுத்து வைக்கின்றனர்.






பெட்டிகளை ஏற்றிக் கொண்டு வண்டி விரைவாகச் செல்கிறது.




பொழுது புலர்ந்ததும், சூர்யா வசந்தனிடமிருந்து விடை பெறுகிறான்.
நான் இப்போது அமிருதபுரிக்குச் சென்று வீரர்களுடன் சேர்ந்து கொள்வேன், சாந்திபுரத்தை அடைவதற்கு நீங்கள் தலைமை தாங்க வேண்டும்!
அப்படியே ஆகட்டும் வசந்த்! நான் அதைப் பற்றி உனக்கு விரைவிலேயே தகவல் அனுப்புவேன்!
மறுநாள் காலை கஜானாவைத் தேடி வந்த வீரசிம்மனுக்கும், ஜபருக்கும் பலத்த அதிர்ச்சி!
ஜபர் நீ காவலுக்கு அனுப்பிய ஆட்கள் காவல் காக்கும் லட்சணத்தைப் பார்த்தாயா?
மகாராஜா! அவர்களை யாரோ அடித்துப் போட்டு மயக்கமடையச் செய்திருக்கின்றனர்.
மகாராஜா! கஜானா காலி!! எல்லாப் பெட்டிகளும் மாயமாக மறைந்து விட்டன!!!
நேற்று கண்டெடுத்த கஜானா இப்பொழுது இருப்பது சந்தேகம் தான்.
ஜபர் நாம் நேற்று இரவு இங்கு வந்த போது, யாரோ நம்மைப் பின் தொடர்ந்து வந்து, நாம் சென்றவுடன், இதை ஆக்கிரமத்திருக்கிறார்கள். ஆனால் யார் அவர்கள்?
காவலர்களை எழுப்பலாம். அவர்களுக்கு ஏதேனும் தெரிந்திருக்கலாம்.
மகாராஜா! அவர்களுக்கு இன்னும் மயக்கம் தெளியவில்லை.


எங்களை யாரோ பின்புறமிருந்து தாக்கி எங்களை மயக்கமடையச் செய்து விட்டனர்!
இப்படிக் கூற வெட்கமா இல்லை! சரியான தண்டச் சோறுகளா!
ஜபர், திரும்பிச் செல்வோம்! இங்கு நேரத்தை வீணாக்கிப் பயனில்லை.
மகாராஜா! ஒரு அம்பு! அதில் ஒரு செய்தியும் இருக்கிறது!
கடிதத்தைக் கொடு!
இதோ, இந்த அம்புதான் எங்கள் மீது பட்டு சிறிது காயப்படுத்தி உள்ளது.
கஜானாவிலுள்ள செல்வமெல்லாம் பொது மக்களின் நற்பணிக்காக உள்ளது. உன்னுடைய போருக்காக அல்ல! இளவரசன் சூர்யா
ஜபர் தன் காவல் வீரர்களிடம் இளவரசன் சூர்யாவைப் பற்றி அறிய பல கேள்விகள் கேட்கின்றான்.
யார் இந்த இளவரசன் சூர்யா?
உங்களை மயக்கமடையச் செய்தவன் யார்?
தொடரும்.

மனிதர்கள் உருவாக்கிய அற்புதங்கள்

# தாஜ்மகால்



உலக அதிசயங்களில் ஒன்றான தாஜ்மகால், மனிதர்களால் உருவாக்கப் பட்ட அற்புதங்களில் தலைசிறந்த ஒன்றாகும்.

அக்பர் சக்கரவர்த்தியின் ஆட்சிக் காலத்தில் முகலாய சாம்ராஜ்ஜியத்தின் தலைநகர் தில்லியிலிருந்து ஆக்ராவுக்கு மாற்றப்பட்டது. அக்பருடைய சந்ததியினர் பின்பு ஆக்ராவிலிருந்தே ஆட்சி செலுத்தினர். அக்பருடைய பேரனான ஷாஜஹானின் மனைவி மும்தாஜ்மகால் 1630ஆம் ஆண்டில் இறக்கும் சமயம் ஷாஜஹானிடம், தனக்குப் பிறகு ஷாஜஹான் வேறு யாரையும் திருமணம் செய்து கொள்ளக் கூடாது என்றும், அவளுடைய பெயர் நிலைத்து நிற்கும்படி அவர் ஏதாவது செய்ய வேண்டும் என்று கூறினாள். ஷாஜஹானும் மறுமணம் செய்து கொள்ளாமல் இருந்ததுடன் அவள் நினைவாக ஞாபகச் சின்னம் எழுப்பவும் தீர்மானித்தார். அவ்வாறு அவர் உருவாக்கியதுதான் தாஜ்மகால்.

இதைக் கட்டுவதற்காக ஷாஜஹான், பல கட்டடவியல் நிபுணர்களைத் தேடியலைந்தார். ஒருநாள் ஒரு வயதான யோகியை சந்தித்த ஷாஜஹான் அவர் ஆலோசனைப்படி, அவர் குறிப்பிட்ட ஒரு சிற்பியை வரவழைத்து அவரிடம் தாஜ்மகால் கட்டடத்திற்கு வடிவமைக்கச் சொன்னார். அவ்வாறு ஒரு வடிவமைப்பு தயாரித்தபின், அந்த சிற்பி மயங்கி விழுந்து விட்டதாக ஒரு கதை உண்டு.

தாஜ்மகாலைக் கட்டி முடிக்க 22 ஆண்டுகள் பிடித்தன. பல ஆயிரம் சிற்பிகளின் உதவியோடு மூன்று கோடி ரூபாய் செலவில் 1653ஆம் ஆண்டு கட்டி முடிக்கப் பட்டது. 1666ஆம் ஆண்டு இறந்த ஷாஜஹானின் உடலும் தாஜ்மகாலிலேயே அடக்கம் செய்யப் பட்டது. வெள்ளை சலவைக்கல்லால் செய்யப்பட்ட தாஜ்மகால் சுமார் 130 அடி அகலமும், 200 அடி உயரமும் கொண்டது. தாஜ்மகால் முழு நிலாக் காலங்களில் மிகவும் அழகாகக் காணப்படுகிறது.

## உங்கள் விஞ்ஞானம்

### ஸ்க்ரிம்ஷா

டீசல் என்ஜின்கள் கண்டு பிடிக்கப் படாத 19ஆம் நூற்றாண்டில், கப்பலை இயக்கி வந்த மாலுமிகள் தாங்கள் செல்ல வேண்டிய இடங்களுக்கு காற்றையே நம்பியிருந்தனர். அந்தக் காலத்தில் திமிங்கிலங்களை வேட்டையாடுவது உச்சத்தில் இருந்தது. நேரம் கிடைக்கும் போதெல்லாம் பொழுதுபோக்காக மாலுமிகள் திமிங்கிலத்தின் எலும்பு களில் படங்கள் பொறிப்பதுண்டு. முதலில் எலும்பை நன்றாகத் தேய்த்து சீராக்கிய பின்னர், கத்தி அல்லது ஊசியின் உதவியால் அதன் மீது சித்திரங்கள் வரைந்து, அதில் சாயம்



பூசுவதுண்டு. அத்தகைய கை வேலைப் பாடுகளுக்கு ஸ்க்ரிம்ஷா என்று பெயர். அவ்வாறு கிடைக்கப் பெற்றுள்ள ஸ்க்ரிம்ஷாக்கள், கடந்த காலத்தில் கப்பல் பயணங்களில் பயணிகளின் வாழ்க்கை எவ்வாறு இருந்தது என்பதைத் தெரிந்து கொள்ள பயன்படுகிறது. அவ்வாறு ஸ்கிரிம்ஷாக்களை உருவாக்குபவர் களை ஸ்க்ரிம்ஷாண்டர் என்று அழைக்கின்றனர்.

## உங்கள் சுற்றுப்புறம்

### போர்க்கப்பல்



'போர்ச்சுகீஸ் மேன்-ஆஃப்-வார்' என்ற வார்த்தையைக் கேட்டால் உடனே நீங்கள் என்ன நினைப்பீர்கள்? ஏதோ கடற்படையைச் சேர்ந்த போர்க் கப்பல் என்று நினைத்தால், நீங்கள் நினைப்பது தவறு. இது கடலில் வாழும் ஒரு மிக விசித்திரமான உயிரினம். அதே சமயம் இவை விஷம் பொருந்திய ஆபத்தான ஒரு உயிரினமாகும்.

இந்த உயிரினம் ஜெல்லிஃபிஷ் எனப்படும் மீன் இனத்தைச் சேர்ந்ததாக கருதப்பட்டாலும், சில விஞ்ஞானிகள் இது தனியொரு உயிரினமல்ல என்றும், நான்கு மீன்கள் ஒன்று சேர்ந்தது என்று ஒரு புதிரானத் தகவலையும் கருகின்றனர். சிலிண்டர் வடிவத்துள்ள இந்த மீனுக்கு ஆலமரத்தின் விழுதுகள் போல் ஏராளமான கொம்புகள் உண்டு. முதுகெலும்பற்ற இந்த மீன், தன்னுருவத்தை விருப்பப்படி மாற்றிக் கொள்ளும். இதனுடைய விழுதுகள் போன்ற கொம்புகள் விஷம் பொருந்தியவை. இதன்மூலம் தாக்கப் படும் மற்ற உயிரினங்களுக்கு உடல் எரிச்சல் ஏற்படும். பல சமயம் இது கடிப்பதால் உயிரினங்கள் மூச்சுத் திணரலால் இதயம் தாக்கப்பட்டு இறந்து விடுமாம்.

# உங்கள் பக்கங்கள்    உங்கள் பக்கங்கள்

## உங்களுக்குத் தெரியுமா?

### புத்தகத்தின் முகவரி

நீங்கள் சில புத்தகங்களின் பின் அட்டையில் ISBN- எண்-80-60001-34-4 என்று அச்சிடப்பட்டு இருப்பதைப் பார்த்திருக்கலாம். இது அந்த புத்தகத்தின் முகவரி என்றால் நம்புவீர்களா?

கண்டிப்பாக அதுதான் உண்மை. ISBN அல்லது இன்டர் நேஷனல் ஸ்டாண்டர்டு புக் நம்பரிங் மூலம் புத்தகங்களுக்கு முகவரி வழங்கப் படுகிறது.

பிரசுரகர்த்தர்கள் புத்தகங்களை அச்சிட்டு வெளியிடும்போது சங்கேத முறையில் தங்கள் புத்தகங் களை குறிப்பிடுகின்றனர். முதலில் காணப்படும் பகுதி எண்கள் எந்த நாட்டில் பிரசுரிக்கப்பட்டது என்றும், இரண்டாம் பகுதி எண்கள் பிரசுரகர்த்தரின் குறிப்பெண்ணாகவும், மூன்றாவது பகுதி புத்தகத்தின் தலைப்பு பற்றியும், எஞ்சியிருப்பவை அச்சிடப்பட்ட பிரதிகளின் எண்ணிக்கையையும் குறிக்கின்றன.




## நம் இந்தியா

**இந்தியாவின் சுதந்திரப் போராட்டத்தின் சில நிகழ்ச்சிகளை நினைவுப்படுத்திக் கொள்வோம்.**



1. ஒவ்வொரு ஆண்டும் ஜனவரி 26ஆம் தேதி குடியரசு தினமாகக் கொண்டாடப் படுவது ஏன்?
2. இந்தியாவிற்கு சுதந்திரம் அளிப்பதென்ற மசோதாவை பிரிட்டிஷ் பாராளுமன்றம் எப்போது தாக்கல் செய்து நிறைவேற்றியது?
3. மும்பையில் இந்தியக் கடற்படையினர் எந்த ஆண்டு ஆங்கிலேயர்களின் ஆதிக்கத்திற்கு எதிராகக் கிளர்ச்சி செய்தனர்?
4. முதன் முதலாக காங்கிரஸ் கட்சியின் தலைமைப் பொறுப்பை வகித்த முஸ்லிம் தலைவரின் பெயர் என்ன? அவ்வாறு எந்த ஆண்டு தலைமைப் பதவி ஏற்றார்?



5. இந்திய சுதந்திரப் போராட்டத்தின் ஒரு முக்கியமான நிகழ்ச்சியை ஆங்கிலேய வைஸ்ராய் லார்டு இர்வின் 'தேநீர் கோப்பையில் புயல்' என்று வர்ணித்தார். அது எந்த நிகழ்ச்சி?

(விடைகள் 70ஆம் பக்கம்)

# போட்டோ வாக்கியப் போட்டி

**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**



*MAHANTESH C. MORABAD*



*SPHOORTHY REDDY V.H.*

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவுஅக்டோபர்2005 இதழில் வெளியிடப்படும். போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

**வாழ்த்துகள்!**

**பரிசு பெற்றவை**

**ஜூன் 2005 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :**

**விஷ்ணுவர்தன்,**
**மே/பா எஸ்.அருணாசலம் பிள்ளை,**
**27, சாலைத் தெரு,**
**கொக்கிரகுளம் - 627 009.**



''காலை எழுந்தவுடன் படிப்பு;
மாலை முழுதும் விளையாட்டு.''

## நம் இந்தியா - விடைகள் (பக்கம் 69)

1. 1950ஆம் ஆண்டு ஜனவரி 26ஆம் தேதியன்று தான் இந்திய அரசியல் நிர்ணயச் சட்டம் வெளியிடப்பட்டது.
2. 1947, ஜூலை 18.
3. 1946 பிப்ரவரி.
4. பத்ருதின் டியாப்ஜி; 1887.
5. 1930ஆம் ஆண்டு காந்திஜியின் தலைமையில் நடைபெற்ற தண்டி யாத்திரை.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor: B. Viswanatha Reddi (Viswam)

# எண்ணெயின் கதை



விஞ்ஞானப் பாடமான பெட்ரோலியத்தைப் பற்றி மாணவர்கள் தெளிவாகப் புரிந்து கொள்வதற்காக பெட்ரோலியம் சுத்திகரிப்பு ஆலையில் பணி புரியும் பொறியாளர் திரு தாஸ் என்பவரை ஆசிரியை அழைத்திருந்தார். அவர் பேசுகையில் நமது தினசரி வாழ்க்கையில் பயன்படும் மின் சக்தி, வெப்பசக்தி அணுசக்தி ஆகியவற்றைப் பற்றிய சிறு விளக்கங்களை அளித்தபின், ''மேற்கூறிய சக்திகள் நமக்கு பல பொருள் களிலிருந்து கிடைக்கின்றன. அவற்றுள் முக்கிய மானது பெட்ரோலியம். அவை பூமியின் அடியில் மிகுந்த ஆழத்திலிருந்து எடுக்கப்படுகிறது'' என்றார்.

''பெட்ரோலியம் பூமிக்கு அடியில் எவ்வாறு உற்பத்தியாகிறது?'' என்று ராகுல் கேட்டான். அதற்கு திரு தாஸ் புன்னகையுடன் ''இலட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் நமது பூமியில் இருந்த பலவிதமான தாவரங்களும் ஜீவராசிகளும் காலப் போக்கில் இறந்து நிலத்துக்கடியில் புதையுண்டன. பூமியின் மேல் படிந்து கொண்டே இருந்த பாறை மண் ஆகியவற்றால் புதைந்து போன் அவை வெகு ஆழத்திற்குச் சென்றன. நிலவி வந்த வெப்பநிலையாலும் அழுத்தத்தாலும் காலப்போக்கில் அவை மக்கிப்போய் பெட்ரோலியமாக உருமாறின'' என்றார்.

''அதை வெளியில் எவ்வாறு எடுக்கிறார்கள்?'' என்று வீணா கேட்டாள். ''முதன் முதலில் பெட்ரோலியம் பூமியில் சில இடங்களில் கசிந்து கொண்டிருந்தபோது கண்டு பிடிக்கப்பட்டது. இப்போது இராட்சச துளையிடும் இயந்திரங்களின் துணை கொண்டு, பூமியை மிகுந்த ஆழத்திற்குத் துளைத்து, பெட்ரோலியம் வெளியே எடுக்கப்படுகிறது. இந்தியாவில் மிகக் குறைவாகவே பெட்ரோலியம் கிடைக்கிறது. ஆகவே நாம் சவுதி அரேபியா போன்ற நாடுகளிலிருந்து அதை இறக்குமதி செய்கிறோம்'' என்றார் திரு தாஸ். தொடர்ந்து, ''பெட்ரோலியத்தை ஏன் சிக்கனமாகப் பயன்படுத்த வேண்டும் என்று இப்போது புரிகிறதா?'' என்று கேட்டார்.

''புரிகிறது!'' என்று வகுப்பில் அனைவரும் ஒருசேரக் கூறினார்கள்.

